# The Viveka Chintamani

## A Monthly Tamil Magazine and High Thought Review.

Devoted to the Diffusion of Practical Truth and Knowledge and to the "Children's Movement."

**Dealing with the Principles of Education, Psychology, Soul-culture, and Ethics. Adapted for Use in Homes and Schools**

---

**God is Love: Knowledge in power : AUM.**
**"Love and Learn"—"ஓதுவதொழியேல்."**
SATYAMEVA JAYATE.


**Vol. XXI.**

*(For the Tamil Year Pramateesa)*

***April 1913-March 1914.***


# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

---

அறிவுடையாரெல்லாமுடையார் அறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.


21-ம் புத்தகம்.

(பிரமாதீசஞு)

1913-ஞு ஏப்ரல்மீ முதல் 1914-ஞு மார்ச்சுமீ வரை.

PUBLISHED BY

**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
**For The Lalita Publishing Co., (Sole Agents and Managers,)**
**Lalitalaya, 19, Adam St, Mylapore Madras, S.**

**1913-1914.**

# TABLE OF CONTENTS.

## Vol XXI (April 1913-March 1914)

### No. 1. For APRIL 1913.



### 1913௵ ஏப்ரல்௴ 1-வது சஞ்சிகை.



### No. 2. For MAY 1913.

1913ஆ மேமூ 2-வது சஞ்சிகை.



No. 3. For MAY 1913.

CHILDREN'S SPECIAL: H. E. Lord Hardinge's Birthday.



1913ஆ ஜூன்மூ 3-வது சஞ்சிகை.

ஸ்ரீ ஹார்டிஞ்சு ஜயந்தி: விசேஷப்பதிப்பு.

## No. 4. Fro JULY 1913.



## 1913ஞு ஜூலை 4-வது சஞ்சிகை.



## No. 5. For AUGUST 1913.

## 1913௵ ஆகஸ்டு௴ 5-வது சஞ்சிகை.



## NO. 6. For SEPTEMBER 1913.



## 1913௵ செப்டம்பர்௴ 6-வது சஞ்சிகை.

## No. 7. For OCTOBER-NOV 1913.



## Nos. 8 & 9. For NOVR-DECEMBER 1913.



## 1913ஞு நவம்பர் டிசம்பர்மூ & 9-வது சஞ்சிகை.

## No. 10. For JANUARY 1914.

The Education of Young India and the Children's Record.



## 1914௵ ஜனவரி௴ 10–வது சஞ்சிகை.



## No. 11. For FEBRUARY 1914.

The Inculcation of Ideals of Social Service.

The Problem of Child-Education or the True Making of Man.

1913௵ பிப்ரவரி மூ 11-வது சஞ்சிகை.

ஸமஷ்டி சேவை ஸாதன போதம்.



No. 12. For MARCH 1914.



1914௵ மார்ச்சு மூ 12-வது சஞ்சிகை

*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்]* [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புஸ்தகம். 21.] **1913**ஸு ஏப்ரல்மீ. பிரமாதீசஸு சித்திரைமீ [சஞ்சிகை. 1.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

| | |
|---|---|
| C. V. Swaminathaiyar, | Lalita Publishing Co., |
| Editor, & Founder V. C. | Sole Agents and Managers |
| S Subrahmaniem, | 19, Adam St, Mylapore, S. |
| Joint Hon. Secretary, | |
| Vivekachintamani Rev: Committee | |

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அர்த்தார்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கே உரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப்பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவர் படாஅது படுவர்: இகபரமிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றேநிஜன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓ.

## Our Twenty-first Birthday Celebration.

### விவேகசிந்தாமணி வாழ்த்து.

"வயது இருபத்தியோன்று."

—:(*):—

"சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம
கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்"—ஔவையார்.

I

ஓம்என்ற சப்தத்துடன் பிறந்தேன்!
தத்என்று சொல்லித் தளர்நடைகற்றேன்!
ஸவிதுஃஎன்றே சூரியனைக்காட்டி
வரேண்யமென்றம்மை வாழ்த்தக்கேட்டேன்!
பர்கஃஎன்னமுகம் மலர்ந் தேனே
தேவஸ்யஎன்ற தேர்மேலே வைத்தார்
தீமஹியென்ற பின்னுந் தொடர்ந்து
தியஃஎன் றுள்ள முவக்சவே னைத்து
யஃநஃஎன் றசெம்மைப் [illegible] ளுக்கு
ப்ரசோதயாத்என பார்க் [illegible]டன் போலானேன்!

II

தசவருஷ மிப்படிநான் தேபாமல்வளர்ந்தேன்
ஏகாதசருத்திரரும் எனைத்தேடி வந்தார்கள்!
துவாதசமாம் விஷ்ணுபதம் விவேகமென்றறிவாய்!
த்ரயோதசமாம் பதின்மூன்றில் தானவனுய்ப்பூத்தேன்!
சதுர்த்தசமாம் பதினன்கில் புஷ்பணியானேன்!
பூரணமாய்ப் பதினைந்தில் மதிமுகம்பால்வடிய
ஷோடசமாம் பதினறில் பழனிவேலைத்தேடிப்
பதினேழில் தபசிருந்து பாரெல்லாம்வென்றேன்!
பதினெட்டில் என்னுதர் பணிசெய்யலேற் றப்பின்
பத்தொன்ப தாமாண்டில் முத்தாரம்பூண்டேன்!

III

இருபஃதி லெல்லையாண்ட சுந்தரரைக்கண்டு
சௌந்தரிய லஹரியவர் மதமேறவுண்டு
இருபத்தி யொன்றிலெல்லை யுலகாளவிட்டு
என்நாதர் எனையறிந்து என்னுள்ளேயொடுங்கப்
பொன்னான பூஷணங்கள் பூதலத்தார்மகிழப்
பவுன்மாற்றுப் பதினாறு மென்மேனியாகச்
சிந்தா மணியெனக்குச் சிறப்பாகவளித்து
விவேகசிந்தா மணியெனவே வாயாரவாழ்த்தத்
தாழாமல் உலகில்நான் தாழ்ந்துயிர்வாழ்ந்தேன்!
வாழ்வான வாழ்வெனக்குக் கிடைத்ததடி யம்மா!

IV

தாழாமல்தாழ்ந்தேதான் நாதனைவந்தடைந்தேன்!
வீழாமல் வீழ்ந்தேயவர் விசுவரூபியானார்
விசுவரூபி யானாரை விராட்டாக நினைப்பீர்
விசுவமெலாம் புகழ்தெய்வம் என்நாதர்கண்டீர்!
விவேகசிந் தாமணியை விருப்பமுடனேந்தி
விவேகந் தான்வளர விசுவாசத்துடனே
விவேகசிந் தாமணியை வாசிப்பாரெல்லோரும்
வாழிமிக வாழியென்று வாணியுறையறைந்தாள்!
வாழ்வான வாழ்வெனக்குத் தந்தவென்னாதர்
தாழாமல் தாழ்ந்தின்னு முலகுக்குழைக்க!

V

பாழான சிந்தைவென்று பரமேஷ்டி துணையென்று
தாழாமல் தாழ்ந்துழைத்து தர்மமேஜயமென்று
வாழ்வான வாழ்வுபெற்று வித்தோடுவரனுமாய்†த்
தாழ்வான சிந்தைவிட்டுச் சித்தேஜீவனுமாகி
ஆழ்வார்களைப்போலத் தாழ்ந்தாரைத் தூக்கிவிட்டு
வாழ்வார்கள் வாழ்வே வாழ்வென்றான்வாணி!
பாழ்த்தமனங்கெட்டதென் றூதூதுசங்கே!
வாழ்ஜீவன் தத்பதமேயானதென் றூதூதுசங்கே!
கோழைமனம்தானே குடிகெடச்செய்யுமென் றூதூதுசங்கே!

ஓம் தத்ஸத்.

† 'பிரமவித்து, வரனுமாய்' என்றபடி.



# விவேக சிந்தாமணி.

## Educational Policy of the Government of India.

## ஸர்க்கார் வித்தியாபிவிருத்தி முறை.

———:(o):———

"சிற்றுயிர்க் குற்றதுணை" கல்வியிலும் மேலானதொன்றில்லை. கல்வியென்றால் என்னை? "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்ற ஔவையார் வாக்கால், கல்வியென்பது மனப்பழக்கமே. மனதைப் பழக்கும் முறை யெதுவோ அதுவே கல்வியெனத் தக்கது. கல்வியென்றாலும் வித்தை யென்றாலும் ஒன்றே. மனம் சங்கல்பவிகல்ப ரூபமாயுள்ளது. அதன் விருத்திக்கு சித்தவிருத்தியென்று சொல்கிறது. இந்த சித்தவிருத்தியினால் மனம் விரிந்து குவிந்து அறிவறிந்து சுகதுக்கங்களை யனுபவிக்கிறது. அறிவை அறிவதுதான் கல்வியின் பயன். அறிவு என்றால் என்ன?

"அகரமுதல வெழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றே யுலகு."

அகர முதலான எழுத்துக்களுக் கெல்லாம் மூல காரணமாய் எல்லா எழுத்துக்களின் சப்தத்திலும் அந்தர்யாமியாய் விளங்குவது அ என்னும் சப்தஸ்வரம். அதுபோல உலகுக்கெல்லாம் ஆதியாயிருந்து எல்லாவற்றிலும் அந்தர்யாமியாய் விளங்குமவர் ஆதிபகவன்-ஆதி முதலாயுள்ள பகவான், அதாவது கடவுள். அறிவுக்கெல்லாம் அறிவாயிருப்பவர் இந்த ஆதிபகவன் தானே. ஆகையால் கல்வியின் நோக்கமெல்லாம் அறிவுக்கறிவா யிருக்கும் ஆதிபகவனை யறிவதாயிருக்க வேண்டும்.

இதையே திருவள்ளுவ நாயனார்,—

"கற்றதனாலாய பயனென்கொல்வாலறிவன்
நற்றாள்தொழாஅரெனின்"

என்று தம் பொய்யாமொழியால் புன்மை நீக்கப் போதித்தார்.

இந்தியா கவர்ன்மெண்டார் இப்பொழுது அவர்களுடைய வித்யாபிவிருத்தி முறையைப் பற்றி ஒரு நீண்ட தீர்மானம் செய்து பிரசுரித்திருக்கிறார்கள். அது டில்லியிலிருந்து 1913ம் ஃபிப்ரவரி 21-ட யிட்டுப் பிரசுரிக்கப் பட்டிருக்கிறது* அதில் அவர்கள் செய்யக் கருதியிருக்கும் வித்யாபிவிருத்தி சம்பந்தமான ஏற்பாட்டைப்பற்றி விஸ்தாரமாய் எழுதியிருக்கிறார்கள். அதன் கருத்தைக் குறிப்பிடுமுன் வித்யா விஷயமாக இந்தியா கவர்ன்மெண்டார் செய்துவந்த பல ஏற்பாடுகளையும் சுருக்கமாய்க் குறிப்பிடுவது ஒக்கும்.

1854-ம் வருஷத்தில் ஈஸ்டிந்தியா கம்பெனி டைரெக்டர்கள் வித்யாபிவிருத்தி விஷயமாய்ப் பிரசுரித்த கடிதம் முக்கியமானது. அதில் தான் வித்யாபிவிருத்தி விஷயமாய் கவர்ன்மெண்டாரின் பொறுப்பு இன்னதென்று அவர்கள் உணர்ந்தார்களென்பது வெளியாகிறது. அப்புறம் லார்ட் மகாலேயினுடைய பிரயத்தனத்தினால் இந்தியாவில் ஆங்கிலேயபாஷை மூலமாய் வித்தியாபிவிருத்தி செய்யத் தீர்மானிக்கப்பட்டது. ஆனாலும் ஸம்ஸ்கிருதம், அரபிக், பெர்ஷியன் முதலான ஆதிபாஷைகளும், அவற்றிலிருந்துண்டான ஹிந்தி, முதலான பிராகிருத பாஷைகளும் கூடவே போதிக்கப்பட்டு வந்தன. ஸ்வபாஷையைப் பாராமரிக்காது விடுவது தப்பென்றே யெண்ணினார்கள்.

ஆங்கில வித்தையோடு புதிதான இங்கிலீஷ் ஸ்கூல்களும் காலேஜ்களும் யூனிவர்ஸிடிகளும் தலையெடுக்கலாயின.

---

* Resolution of the Government of India No. 301-C D dated Delhi, 21st Febry 1913.

லார்ட் கர்ஸன் கவர்னர்ஜெனரலாயிருக்கையில் 1904 ௵ மார்ச்சு ௴ 11௳ இந்தியா கவர்ன்மெண்டார் ஒரு நீண்ட தீர்மானம் செய்து பிரசுரித்தார்கள். அதில் இந்தியாவில் வித்யாபிவிருத்தி விஷயமாய் ஸர்க்கார் செய்த முயற்சியையும் அதன் பயனையும் காரிய காரணதோரணையோடு விசாரணைசெய்து பயன் விளங்கத் தக்கதாய் குறிப்பிட்டிருந்தார்கள்.

1882-83-ம் வருஷத்தில் வித்தியாபிவிருத்தி விஷயமாய் நியமிக்கப்பட்ட 'எட்யுகேஷன் கமிஷன்' சபையார் செய்த சிபார்சுகளையும் ஆராய்ந்து பார்த்து அவர்கள் சிபார்சு செய்த சீர்திருத்தங்களை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவர வேண்டியபிரயத்தனங்கள் செய்ய வேண்டியதைப்பற்றி வற்புறுத்திக் கூறினார்கள்.

பிறகு 1904-வது வருஷத்தில் ஏற்படுத்திய 'யூனிவர்ஸிடி கமிஷன்'சபையார் செய்த ரிபோர்ட்டை யனுசரித்து இது வரையில் பரீக்ஷைகள் நடத்துவதே தொழிலாயிருந்த யூனிவர்ஸிடிகளின் தொழிலைமாற்றி, அவை மாணாக்கரின் மனப்பழக்கத்துக்கு அநுகுணமான ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று திட்டம் செய்தார்கள். அதை யனுசரித்தே புதிய யூனிவர்ஸிடி ஆக்ட் சட்டமாகச் செய்யப்பட்டது. இந்த ஒன்பது வருஷகாலமாக வித்தியாபிவிருத்தி சம்பந்தமாக அனேக மாறுதல்கள் செய்யப்பட்டு வந்தது. யூனிவர்ஸிடி மெட்ரிகுலேஷன் பரீக்ஷை யொழிந்தது. ஹைஸ்கூல்கள் மாணாக்கர்களின் நாப்பழக்கம் மனப்பழக்கம், கைப்பழக்கம் முதலான இந்திரிய விருத்திக்கநுகுணமான ஏற்பாடுகளை யநுசரித்து சித்த விருத்தியை யுண்டுபண்ணி நன்னடக்கைக் குதவியான சிக்ஷைகளை யனுசரிக்க வேண்டுமென்று திட்டம் செய்தார்கள். யூனிவர்ஸிடிகளும் காலேஜ்களும் பரீக்ஷைக்குப் பிள்ளைகளைத் தயார் செய்வதே பெரிய வேலையென்று நினையாமல் மாணாக்கர்களுடைய மனப்பழக்கம் சிறந்ததாகவும் நடைப்பழக்கம் மிருந்ததாகவுமிருக்க உழைக்க வேண்டுமென்ற திட்டம் செய்தார்கள்.

யூனிவர்ஸிடிகளின் தொழில் உயர் கல்வி போதித்தல் என்று வற்புறுத்தினார்கள். அதற்கேற்ற ஏற்பாடும் செய்யலானார்கள். பரீக்ஷைக்குப் படித்தலும் பரீக்ஷைகள் செய்தலுமே பிரதானமாக விருந்த பழைய நியமத்தை மாற்றினார்கள். போதனாசக்திவாய்ந்த போதகர்களைக் கொண்டு காலேஜ்களின் போதனாசக்தியை விருத்திசெய்ய யூனிவர்ஸிடியார் பிரயத்தனம் செய்ய வேண்டுமென்று விதித்தார்கள். இதை யனுசரித்து காலேஜ்களின் ஏற்பாடு முழுவதும் மாறலாயிற்று. இப்பொழுது இந்தியா கவர்ன்மெண்டார் பிறப்பித்திருக்கும் தீர்மானத்தில் இந்த 8-வருஷங்களாகச் செய்த முயற்சிகளின் பயனையும் இனி ஸர்க்கார் செய்யக் கருதியிருக்கும் முயற்சியையும் சாங்கோபாங்கமாய்க் குறிப்பிட்டு வெளியிட்டிருக்கிறார்கள்.

முதலாவது இந்திய சக்ரவர்த்தியவர்கள் கல்கத்தா யூனிவர்ஸிடி சங்கத்தாருக்கு பதிலுரைத்தபோது "கல்வியினுங்கில்லை சிற்றுயிர்க் குற்றதுணை" யென்ற மூதுரையின் கருத்தைப் பெரிதும் புகழ்ந்து கொண்டாடி அவர் டில்லியில் வந்து சக்ரவர்த்தியாக முடிசூட்டப் பெற்றதற்கு அடையாளமாக இனி ஸர்க்கார் வித்யாபிவிருத்தி விஷயத்தில் அதிக ஊக்கம் கொண்டுழைப்பதன்றி கற்றதோர் கல்வியின் பயன் அவாது பிரஜைகளின் மனப்பழக்கம், கைப்பழக்கம், நடைப்பழக்கம் இவற்றில் விளங்கும்படி செய்யப் பிரயத்தனம் செய்வார்கள் என்றதையே கவர்ன்மெண்டார் தங்களுக்கு வேத வாக்காகக்கொண்டு (அறிவு நிறைந்த உபதேசமாகக் கொண்டு) ஊக்கத்தை கைவிடாமலுழைக்கக் கருதியிருப்பதை வெளியிடுகிறார்கள்,

இரண்டாவது-"Formation of character"-குணம்நிறையக் குற்றம் நீக்கும் மனப்பழக்கம் எதுவோ அதுவே ஸர்க்கார் ஆதரவுக்கேற்ற வித்யாபிவிருத்தி முறையும் அவர்களுடைய வித்யாமுறையின் பிரதம நோக்கமுமாயிருக்க வேண்டுமென்று தெரிவித்திருக்கிறார்கள். இதற்கு "Moral and religious eductation"-சன்மார்க்கம் சஹமார்க்கம் என்று சொல்லக்கூடிய இருவகை மனப்பழக்கம் இன்றியமையாதனவென்றும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். சன்மார்க்கமாவது:—கசடறக் கற்றலும், கற்றபடி நிற்றலுமாம்.

"கற்கக்கசடறக், கற்பவைகற்றபின்
நிற்கவதற்குத்தக."

என்றார் திருவள்ளுவரும்.

கற்பனவற்றை மனதின் கசடு (அழுக்கு) அற (நீங்க)க் கற்கவேண்டும் (மனப்பழக்கத்தால் ஆய்ந்துதேர்ந்து உள்ளறிவுணர உணரல் வேண்டும். அப்படி மனதின் அழுக்காறு நீங்கக் கற்றபின் அதற்குத் தக்கவாறு நடத்தையில் நின்று தான் கற்றதைச்சாதிக்க வேண்டும். இது தான் Moral Education.—சன்மார்க்க வித்தை.

ஸஹமார்க்கமாவது:(Religious Education): "கடவுளும் நானு மொன்றானேன்" என்ற திருமந்திர உபதேசம் பலிக்க, மனம் சித்தவிருத்தி நிரோதனத்திற் பழகிய பழக்கத்தினுக், "அலையற்ற நீர்போல்" சங்கல்ப விகல்ப சேஷ்டைகளற்றதாகி நின்ற நிலையில் சாக்ஷிமாத்திரமாய் விளங்கும் வைபவத்தைக் கண்டனுபவித்து அந்த ஸ்வானுபவத்தால் ஸர்வசாக்ஷியாயுள்ள கடவுளை யுணர்ந்து அவரும் நானும் ஒன்றான அபேத தரிசனத்தால் ஸத்திய ஞானம் பெற்று நித்தியத் திருப்தி யடைதலாம்'. இந்த இரண்டும் கல்வியின் உண்மை நோக்கங்களாம். திருவள்ளுவரும் இதையே வற்புறுத்தி "அறிவுடையாரெல்லா முடையார்; அறிவிலாரென்னுடைய ரேனுமிலர்" என்று முன்னவரது மனத் திருப்தியையும் பின்னவரது அதிருப்தியையும் வற்புறுத்திக் கூறலானார்.

ஸநாதனமான இவ்விரண்டு மூலக் கொள்கைகளையும் ஸர்க்கார் கைப்பற்றினதற்காக எல்லாம்வல்ல ஈசன் திருவருளைச் சிந்தித்துத் துதிக்கின்றோம். இந்த நோக்கத்தை மறக்காமலும், கைவிடாமலும், மலையிலக்காக மனத்திற் கொண்டுழைப்பதுதான் கஷ்டம். இந்தக் கஷ்டமான வேலையைச்செய்ய சர்க்கார் கடமைப் பட்டவர்களே. ஏனெனில் "மன்பதை செப்பஞ்செயல்" அரசனுடைய முக்கியக் கடமையாம்.

இதை யனுசரித்து பிரதம வித்தையையும், அதற்கு மேற்பட்ட துவிதாத்மகமான (secondary) வித்தையையும் சீர்பெறச் செப்பம் செய்ய முனைந்திருக்கிறார்கள். சுவரில்லாமல் சித்திரம் எழுத முடியாதென்கிற வசனத்தை யனுசரித்து, நல்ல கட்டடமும், மற்ற தளவாடங்களும் பூரணமாயிருக்க வேண்டி அதற்காக தனமுதவி (grants) செய்திருக்கிறார்கள். பிரதம பாடசாலைகள் அதிகமாகவேண்டும். பிரதமபாடசாலைப் போதகர்கள் அறிவு விசாலப்பட வேண்டும். போதகாசிரியரின் அறிவு விசாலப்படா விட்டால்,விசாலமான கட்டடங்களால் மட்டும் பிரயோசனமில்லை. மனப்பழக்கத்தோடு கைப்பழக்கமும் சேர தோட்டங்கள் முதலான உபகரணங்களும் வித்யா சாலைக்கடுத்ததாகவே யிருக்கவேண்டும். பணத்தாலாவது மனத்தாலாகுமென்று நினைக்கிறார்கள். பணமும் மனமும் ஒன்று சேர்ந்தாலன்றி அறிவு பிரகாசிக்கும்மனம் அதை மதியாது. பணமும் மனமும் ஒன்று பட்டால் குணமும் உண்டாகும்.

இந்த இரண்டு நோக்கத்தையும் முதன்மையாகக்கொண்டு இதற்கு அனுகுணமாக ஹோஸ்டல்கள், ஸ்கூல் கட்டடங்கள், சத் ஸம்பிரதாயங்கள், இவைகளை ஆதரித்துவரத் தீர்மானித்திருக்கிறார்கள்.

சுகாதார விஷயமாய் இதுவரையில் போதித்து வந்தது போதாதென்றுணர்ந்து அக்குறையை நிவிர்த்திக்க பிரதம வித்யாசாலை முதற்கொண்டு ஸர்வகலாசாலை பரியந்தம் சுகாதார சம்பந்தமான விஷயங்களை நன்றாய் கவனித்துப் போதிக்க வேண்டுமென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். சுகாதார விஷயமாய் உள்ளமுவந்துழைக்க முனைந்தே நாம் நித்திய சுகத்துக்கு ஆதாரமான ஆத்மஞானம் பெறுவதற்கான சாதக சாதனங்களைப் பெற்றுச் சாதித்தோம். ஹிருதய சுத்தியே பிரதமமானுலும் ஆயுராரோக்கியமின்றி ஹிருதயசுத்தி வாய்ப்பதற்கான முயற்சிகளை ஊக்கமது கைவிடாது தொடுபிடியாய்த் தொட்டு நின்றுழைத்தல் கஷ்ட சாத்தியமாம். ஆகையால் சுகாதாரத்தை முக்கியமாய் கவனித்தது முற்றும் சரியே. அஹத்தூய்மை புறத்தூய்மையின்றிச் சித்தியாது. இதற்காக ஸர்க்கார் செய்யத் தீர்மானித்திருக்கும் ஏற்பாடுகள்:—

1. பள்ளிக்கூடக் கட்டடங்கள், ஹோஸ்டல் கட்டடங்கள், மாணவர் வசிக்கும் இதர இடங்கள் இவற்றின் சுகாதார நிலைமையைப்பற்றி விசாரித்து ஏற்பாடு செய்யல்.

2. கட்டடங்கள் கட்டுவதற்கான ப்ளான்களை சுகாதார சாஸ்திரத்தில் தேர்ந்தவர்களைக் கொண்டு பரிசீலனை செய்யல்.

3. ஸ்கூல் லீவிங் ஸர்டிபிகேட் பெறுவதற்கான அவசிய பாடங்களில் சுகாதாரமொன்றாகச் செய்தல்.

4. ஆண் பிள்ளைகளைப் பரீக்ஷிக்கையில் ஒட்டுவாரொட்டி வியாதிகள், விஷசுரம், கண்நோய் இவைகளிருக்கின்றனவா வென்று பார்த்துப் பரிகாரம் தேடல்.

5. பள்ளியில் படிக்குங் காலத்தையும் அதனுல் வரும் பயனையும் விசாரித்து சரியான கால அளவு திட்டம் செய்யல்.

6. விளையாட்டுக்காகவும் விநோத காலக்ஷேபத்துக்காகவும் கரடிக் கூடங்கள், தோட்டங்கள், விளையாடுமிடங்கள், வாசிக்குமிடங்கள், பொதுவில் கூடுமிடங்கள் முதலான அனுகூலங்கள் ஏற்படுத்தவேண்டித் திட்டம் செய்யல்.

7. இந்த ஏற்பாடுகளை யெல்லாம் சரிவர நடத்துவதற்கான இன்ஸ்பெக்ஷன் உத்யோகஸ்தர்கள், விசாரணைகர்த்தர்கள் இவர்களைத் திட்டம் செய்யல்.

இன்னும் ஸர்க்கார் செய்ய உத்தேசித்திருக்கும் முக்கிய சீர்திருத்த முறைகள் என்னவெனில்:—

1. இப் பொழுதுள்ள வித்யாஸ்தாபனங்களின் தரத்தை விருத்தி செய்யல்.

2. பிரதமவித்தையும் அதற்கு மேற்படியிலுள்ள பள்ளிப்பழக்கமும் பிரயோஜனர்த்தமாயிருக்கும்படி ஏற்பாடு செய்யல்.

3. உயர்தர வித்தைகள் பயிலவும், தானுக மேல்விசாரம் செய்யவும் அநுகூலமான சாதனங்களை யேற்படுத்தவேண்டி அதற்கு அநுகூலமான திட்டம் செய்யல்.

—:o:—

## Patience and Envy—A contrast.

## பொறுமையும் பொறாமையும்.

—:(*):—

(213-வது பக்கத் தொடர்ச்சி)

ரூபசிலைக்கும் சிருங்க புஜனுக்கும் மனராசியேற்பட்டு ஒருவரை யொருவர் நேசித்து விவாகம் செய்துகொள்ளத் தீர்மானித்தும் ரூப

சிகையின் தகப்பனான அக்கினிசிகன் அதற்கு இடையூறு செய்வதிலே கண்ணாயிருந்தான் என்று காட்டினோம். அவனிட்ட கட்டளைகளை யெல்லாம் ரூபசிகையின் மாயையினால் சிருங்கபுஜன் செய்து முடித்தானாயினும் அக்கினிசிகன் அவனை மேன்மேலும் பரிசோதிக்கலானான். இரண்டு யோஜனை தூரத்தக்கப்பாலுள்ள பெருங்காட்டிலிருக்கும் சிவாலயத்திலுள்ள அவன் தம்பி தூமசிகனிடம் சென்று நாளைக்கு விவாகமென்று தெரிவித்து ஒரு மணி நேரத்தில் திரும்பி வருகவென்று கட்டளை யிடவும், அக்காரியம் தன்னால் முடியாதென்று நினைக்கலானான். அப்படி யிருந்தும் சிருங்கபுஜன் அதைரியம் கொள்ளாமல் அதை ரூபசிகைக்குத் தெரிவித்தான்.

### மதியூகமந்திரி.

அச்சிறுமி பலவகை மாயைகளும் நன்றாய்க் கற்றறிந்தவளாகையால், இதைக்கேட்ட வுடனே அவள் மனோவேகமாய்ச் செல்லத்தக்க ஒரு குதிரையையும், மண், நீர், நெருப்பு, முள் இவைகளையும் மந்திரித்துக் கொடுத்தாள். கொடுத்து, தாம் இந்தக்குதிரை மேலேறி அவ்விடம் சென்று அங்குள்ள சிவாலயத்தில் தேவதரிசனம் பண்ணிப் பிறகு தூமசிகனுடன் செய்தி சொல்லிவிட்டு, நிமிஷமும் தாமதியாமல் உடனே இக்குதிரைமேலேறிச் சாட்டையால் இதையொரு அடி அடித்து விடுங்கள். இது வாயு வேகமாய் நிமிஷ நேரத்தில் உங்களை இங்கே கொண்டுவந்து சேர்த்துவிடும். ஆயின் வரும்பொழுது தாங்கள் அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டே வரவேண்டும்; ஏனெனில் தூமசிகன் ஒருவேளை துரத்திக்கொண்டு வருவான். அப்படி அவன் வரக்கண்டால் முதலில் இம்மண்ணை யெறியவேண்டும்; அதையும் லக்ஷியம் செய்யாமல் ஓடிவந்தால் ஜலத்தையும், அதன் பின்னும் தொடர்ந்து வந்தால் முள்ளையும், அதற்குப் பின்னும் வரக்கண்டால் நெருப்பையும் வழியே போடவேண்டும். அப்போதும் இடையில் ஒரு க்ஷணம்கூட நிற்காமல் ஓடிவர வேண்டும். தாமசித்தால் தூமசிகன் தம்மைப் பிடித்துத்தின்று விடுவான் என்று அவனுக்கு எச்சரிக்கைசொல்லி அனுப்பினாள்.

சிருங்கபுஜன் ரூபசிகையின் மொழியே தனக்கு குருவாக்கிய மென்றெண்ணி அவள் சொன்னபடியே அவ்வாலயத்திற் சென்று தேவதர்சனம் செய்து தூமசிகனுக்குச் செய்தி தெரிவித்துக் குதிரைமேலேறி வெகு வேகமாய்த் திரும்பி விட்டான். திரும்பிச் சிறிது தூரம் வந்து பின்னேபார்த்தபொழுது தூமசிகன் அதிவேகமாய் நெருங்கி வரக்கண்டான். கண்டவுடனே ரூபசிகை கொடுத்த மண்ணை யெறிந்தான்; அது வழியிலே ஒரு பெரிய மலையாகி விட்டது. தூமசிகன் அதையும் ஒரு சிறிய கல்லைப்போல் அலக்ஷியமாய்த் தாண்டி விட்டான். அது கண்டு இவன் ஜலத்தைத் தெளித்தான்; அது ஒரு பெரிய ஆறாகி வெள்ளம் பெருகிற்று; அதையும் தூமசிகன் ஒரு சிறிய வாய்க்கால் போல தாவிக்கொண்டு வரவே, ஓகோ, இவன் அசாத்தியனா யிருக்கிறானே யென்று அஞ்சி, சிருங்கபுஜன் ரூபசிகை சொல்லியபடி முள்ளை யெறிந்தான். அந்தச் சிறுமுள் பல்லாயிரம் முட்களடர்ந்த பெருங்காடாய் விட்டது. அரக்கன் அதையும் ஒரு சிறுமுள் போலவே இமைப்பொழுதில் தாவி வரக்கண்டு மிகவும் அச்சங்கொண்டு அக்கினியை யெறிந்தான். அது ஒரு பெரிய காட்டுத் தீயாய் வளர்ந்து எங்கும் சூழ்ந்துகொண்டது. தூமசிகன் அவ்வளவு தூரம் வழி நடந்து வந்து வருத்த முற்றிருப்பதுடன் அந்தத் தீயும் அவனால் அளவிடக் கூடாததாயிருக்கவே அவன் உடல்சோர்ந்து உற்சாகமும் அடங்கித் திரும்பித் தன்னிடத்திற்குப்போய்விட்டான்.

"சூழ்வினை தாழ்மை பயக்கும்"

இப்படி ரூபசிகையின் மாயா பலத்தால் தீங்கு ஒன்றும் நேராமல் சுகமாய்த் திரும்பிவந்து சிருங்கபுஜன் அக்கினிசிகனிடம் சென்று, தான் தூமசிகனிடம் போய்வந்த செய்தியைத் தெரிவித்தான். இவன் அங்கே போனவுடனே தூமசிகன் இவனைப் பிடித்துத்தின்று விடுவானென்கிற எண்ணங்கொண்டு அவன் இவனை அங்கே அனுப்பினது. அப்படியிருக்க, இவன் சிறிதும் அபாயமின்றித் திரும்பிவந்துவிடவே ஒருக்கால் இவன் அங்கே போகவேயில்லையோ என்னவோ வென்று அக்கினிசிகன் ஐயமுற்று, நீ அவ்விடம்போய் வந்ததற்கு அறிகுறி யாதென்று கேட்டான். சிருங்கபுஜன் தான் போய்வந்ததற்கு அறிகுறியாக அங்கே தேவாலயம் இருக்கும் விதத்தையும் அதற்குள் ஒவ்வொரு சிற்றறையும் அமைத்திருக்கும் விநோதத்தையும் விவரமாய் எடுத்துக்கூறினன். அவைகளை யெல்லாம் கேட்ட பிறகு அக்கினிசிகன், இச்செய்திகள் இவனுக்குத் தெரிய வேறு வழியில்லையாகையால் அங்கே போய்த் தான்வந்திருக்க வேண்டுமென்று தெரிந்து தனக்குள் இருந்த சந்தேகம் தீர்ந்து, பிறகு வேறுகதி யில்லாமல் பெண்ணை அவனுக்கே விவாகம் செய்துகொடுக்க உடன்பட்டு, மறுநாள் வெகு வைபவமாக அவர்களிருவருக்கும் விவாகம் நடப்பித்தான். அதன் பிறகு அவர்களிருவரும் வெகுநாள் மனமகிழ்ச்சியோடு விநோதமாக அங்கேயே வசித்துக்கொண்டிருந்தார்கள்.

கற்புநிலை.

இவ்வாறிருக்கையில் ஒருநாள் சிருங்கபுஜனுக்கு தன் ஊருக்குச்செல்ல வேண்டுமென்ற விருப்பமுண்டாயிற்று. அக்கருத்தைத் தன் அருமை மனையாட்டியான ரூபசிகைக்குத் தெரிவித்தான். அவள் "குல மகட்குத் தெய்வம் கொழுநனே" யென்று எண்ணி நடக்கும் கற்புநிலை யுடையவளாகையால் கணவன் கருத்துக் கிசைந்து, தம்மிஷ்டப்படியே ஆகட்டும், நானும் தம்முடன் கூடவே வருறேன், ஸ்திரீகளுக்குக் கணவனை விடத்தெய்வம் வேறில்லையே! ஆனால் இதை என் தகப்பனர் கேட்டால் உடன்பட மாட்டார்; ஆகையால் அவருக்குத் தெரியாமலே போய்விடுவோமென்று சொல்லி, மனோஜவம் என்னும் ஒரு குதிரையைப் பிரயாணத்துக்கு ஆயத்தம் செய்து தானும் ஆண் உடையுடுத்து, சிருங்கபுஜனது பொன்னம்பை யெடுத்து வந்து அவனிடம் கொடுத்துவிட்டு, இருவரும் அக்குதிரையின் மேலேறிக் கொண்டு புறப்பட்டு வெகு வேகமாய்ப் போய்விட்டார்கள்.

மதியூக மந்திரி.

அவர்கள் புறப்பட்டுப் போன சிறிதுநேரத்திற் கெல்லாம் அக்னிசிகன் தன் வீட்டில் மகளையும் மருமகனையும் காணுமல் சற்றுப் பொழுது தேடிப் பார்த்தான்; அவர்கள் எங்கும் அகப்படவில்லை. அதனுல் அவன் கோபங்கொண்டு, அவர்கள் எங்கேபோயிருந்தாலும் தேடி அவசியம் திரும்பிக் கொண்டுவரவேண்டுமென்று, வெகு வேகமாய் இவர்கள் சென்ற திசையை நோக்கியே ஓடிவந்தான். இப்படி தன் தகப்பன் ஓடிவருவதை ரூபசிகை வெகு தூரத்திலிருந்தே பார்த்து அறிந்துகொண்டு குதிரையையும் தன் கணவனையும் ஓரிடத்தில் மறைவாய் ஒளித்து நிறுத்திவிட்டு, தான் மாத்திரம் அங்கே விறகு வெட்டிக் கொண்டிருந்த ஒருவனை நோக்கி, அதோ ராக்ஷஸன் வருகிறுனென்று சொல்லிப் பயம்காட்டி ஓடிப்போகச் செய்து அவன் கையிலிருந்த கோடாரியை வாங்கி விறகு வெட்டுகிறவனைப் போல் நின்றுகொண்டிருந்தாள்.

"சந்தேக விபரீதம்."

அக்னிசிகன் அவ்விடம்போய் அங்கே ஆண் வேஷம் தரித்திருக்கும் மகளைப்பார்த்து, இவ்

வழியாய் எவராயினும் ஆணும் பெண்ணுமாய் இருவர் போகக்கண்டாரோ என்று கேட்டான். அதற்கு ரூபசிகை நான் காணவில்லை; ராக்ஷஸராஜனுகிய அக்னிசிகன் இறந்துபோய் விட்டான்; அவனைத் தகனஞ்செய்ய நான் விறகு வெட்டிக்கொண் டிருக்கிறேன்; மற்றொன்றும் எனக்குத் தெரியாது என்றாள். அதைக்கேட்ட அக்னிசிகன் முழுமூடனாகையாலே திடுக்கிட்டு பெண் போனால் போகட்டும்; நாமே இறந்து போனதாக இவன் சொல்லுகிறானே; இது மெய்யோ பொய்யோ வீட்டிற்குப்போய் விசாரிப்போமென்று திரும்பி வீட்டிற்குச் சென்றான். அங்கே தன் வேலைக்காரர்களை அழைத்து, நான் செத்துப்போனதாக ஜனங்கள் சொல்லுகிறார்களே, அது மெய்யோ பொய்யோ என்று கேட்க, அவர்கள் இவன் முடத்தனத்தைப்பற்றித் தங்களுக்குள் நகைத்துக்கொண்டு அது பொய், தாங்கள் க்ஷேமமாய் ஜீவித்திருக்கிறீர்கள் என்று சொன்னார்கள். அது கேட்டு அக்கினிசிகன் தைர்யங்கொண்டு மறுபடியும் பெண்ணைத்தேடிக்கொண்டு ஓடினன். அப்பொழுது அவன் வருவதை ரூபசிகை கண்டு முன் போலவே குதிரையையும் கணவனையும் மறைத்து வைத்து தன் கையில் ஒரு காகிதத்துடனே நின்றுகொண்டிருந்தாள்.

"மூடனுக்குப் புத்தி பிடரியிலே."

அக்கினிசிகன் அவள் அருகே சென்று இந்தக் காட்டுவழியாய் யாராவது இரண்டுபேர் போனார்களோ வென்று முன்போலவே கேட்க ரூபசிகை, ஒருவரும் போகவில்லை; ராக்ஷஸ ராஜாவாகியஅக்னிசிகன் போர்க்களத்தில் பகைவர்களால் அடிபட்டான், பிராணன் போகிற தருணமா யிருக்கிறது? தன் ராஜ்பத்தைப் பார்த்துக்கொள்ளும்படி அவன் தம்பிக்குக் கடிதம் எழுதி இதோ என்கையில் கொடுத்து அனுப்பினன். நான் அதைக் கொண்டு போகிறேன் என்று பதில் சொன்னான். அதைக் கேட்கவே அக்கினிசிகனுக்கு முன்போலவே சந்தேகம் உண்டாகிவிட்டது. திரும்பி வீட்டுக்குப்போய் வேலைக்காரர்களைக் கேட்க, அவர்கள் அவனது மூடத்தனத்துக்கு முன்னிலும் அதிகமாய் நகைத்து, அந்தப் பேச்சு பொய், நீங்கள் அதை நம்ப வேண்டாமென்று தைர்யம் சொன்னார்கள். அதன் மேல் எப்படிபோனாலும் போகட்டுமென்று இவன் வீட்டிலேயே நின்றுவிட்டான்.

'அவசரக்காரனுக்கு புத்திமட்டு."

இப்படி ரூபசிகையின் யுக்தி புத்திகளால் தனக்கு மலைபோல்வந்த விபத்துக்களெல்லாம் பனிபோல் விலகிப் போக சுகமாக சிருங்கபுஜன் ஊர் போய்ச் சேர்ந்தான். சிருங்கபுஜன் காட்டிற்குப் போனபிறகு, நடந்த காரியமெல்லாம் தன் மனைவிகள் குணவதியின்மேல் பொறாமையினால் செய்தவையென்று அரசனுக்கு நாளாவர்த்தியில் நன்றாய்த் தெரியவந்தது. அவன் தான் யோசனையின்றி அநியாயமாய்க் குணவதியைச் சிறைவைத்ததற்காக மிகவும் பச்சாத்தாப மடைந்தான். ஆயினும் குணவதியைச் சிறை மீட்டால் சிருங்கபுஜ னில்லாமையைக் கேட்டு அவள் மிகவும் விசனப்படுவாளென்று நினைத்துச் சிறை மீட்காமலே சிருங்கபுஜனது வரவை எதிர்பார்த்திருந்தான்.

"தானே தனக்குப் பகையும் நட்டானும்."

அங்காட்டுக் குடிகள் சிருங்கபுஜன் பலபராக்கிரமங்களையும் நற்செய்கைகளையும் நன்றாய் அறிந்தவர்களாதலால் அவன் காட்டிற்குப் போனநாள் முதல் உற்சாகமழிந்து துக்கக் கடலில் ஆழ்ந்து கிடந்தார்கள். இப்பொழுது அவன் மனதுக்கிசைந்த மனையாளுடன் வரக் காணவே யாவரும் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினர்கள். அரசனுக்கும் அளவிடக் கூடாத ஆனந்த முண்டாயிற்று. தாங்கள் செய்த காரியமெல்லாம் பூரணமாய்ப் பலியாமல், தன் வினை தன்னைச் சுடுமென்றபடி கடைசியில் தன

க்கே வினையாகவந்து முடியும்படி நேரிட்டதே! உண்மை தெரிந்தால் ராஜா என்னசெய்வாரோ வென்று அச்சிறுவனது மாற்றாந்தாய்மாரும் தமயனும் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

"பிரிந்தவர் கூடல்."

புத்திரன் வந்து சேர்ந்தபிறகு அரசன் தன் மந்திரியை அழைத்து, நான் குணவதியை எந்தக் காரியத்திற்காகச் சிறைசெய்தேனே அந்தக் காரியம் முடிந்துபோய் விட்டது; உடனே போய் அவளைச் சிறைவிடுவித்து மஞ்சனமாட்டி இங்கே யழைத்து வாருமென்று கட்டளை யிட்டான். "அப்படியே!" என்று அவ்வமைச்சன் உடனே சென்று குணவதியைச் சிறைமீட்டு ஸ்நானம் செய்வித்து அரசன் சமுகத்துக்கு அழைத்து வந்தான். குணவதியும் தர்மாங்கதனும் சிங்காசனத்தில் வீற்றிருந்து சிருங்கபுஜனையும் ரூபசிகையையும் வரவழைத்தார்கள். அப்படியே வந்து அவர்கள் இவர்களைக் கண்டு அடிபணிந்து நிற்க, அரசன் சிருங்கபுஜனையும் குணவதி ரூபசிகையையும் எடுத்து ஆலிங்கனம் செய்துகொண்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர்கள். பிறகு சிருங்கபுஜன் அரசனது அனுமதியின்மேல் தான் பொன்னம்பைத் தேடிக்கொண்டு வரும்படி காட்டுக்குப் போனது முதல் அன்றுவரை நடந்தவையாவும் விவரமாய்த் தெரிவித்தான். அதுகேட்டு அரசனும் அரசியும் ரூபசிகையின் கற்புநிலைமைக்கும் வல்லமைக்கும் ஈடாகச் சொல்லத்தக்கது இவ்வுலகில் வேறெதுவு மில்லையென மிகவும் மெச்சி மனமகிழ்ந்தார்கள். அன்று முதல் பல நாள் வரையில் அப்பட்டணத்தில் ஒரு மஹோற்சவமா யிருந்தது.

"தன்வினை தன்னைச் சுடும்."

பிறகு தர்மாங்கதன் தன் பத்னிமாரை யெல்லாம் வருவித்து உண்மை யென்னவென்று விசாரிக்கையில், அவர்கள்செய்த வஞ்சனை வெளியாயிற்று. அதன்மேல் அரசன் கடுஞ்சினங்கொண்டு அவர்களை ஆயுளளவும் சிறையிலிருக்கும்படி கட்டளைசெய்தான். அதுகண்டு தயாளகுணமுள்ள குணவதி அரசனைப் பலவாறு வேண்டிக்கொண்டு, அவர்கள் செய்த குற்றத்தை மன்னித்து அவர்களை விடுவிக்கும்படி கேட்டுக்கொண்டாள். அரசன் குணவதியின் தயாள குணத்தைக் கண்டு மிகவும் புகழ்ந்து அவள் வேண்டிக்கொண்டபடியே அவர்களை மன்னித்தான். பின்பு தன் பிள்ளைகளை வரவழைத்து விசாரித்தான். சிருங்கபுஜனுக்கு அவர்கள் சதி நினைத்தது உண்மைதானென நன்றாய்த் தெரியவரவே அவர்கள் ஊரைவிட்டு ஓடிப்போகும்படி உத்தரவு செய்தான். அதைச் சிருங்கபுஜன் கேட்டுத் தந்தையை வணங்கி; அவர்கள் தெரியாமல் செய்த அப்பிழையைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமென வேண்டிக்கொண்டான். அப்படியே ஆகட்டுமென்று அப்புதல்வனுடைய பெருமைக்காகவே அரசன் அவர்களுடைய பிழைகளையும் பொறுத்துக்கொண்டான். பிறகு அவர்கள் எல்லோரும் அந்நியோந்நியமாக வாழ்ந்துக்கொண்டிருந்தார்கள். அப்பால் சிருங்கபுஜன் ரூபசிகையுடன் ஆலோசித்து அவளுடைய தமக்கைகள் தொண்ணூற்றொன்பது பெயர்களையும் வரவழைத்து அவர்களைத் தனது தமயன்மார் தொண்ணூற்றொன்பது பேருக்கும் வெகு வைபவமாக விவாகம்செய்வித்தான். பிறகு அத்தேசத்து ஜனங்கள், குணவதி, சிருங்கபுஜன், ரூபசிகை யிவர்களுடைய மேலான குணங்களைக் கண்டு மகிழ்ந்து மூத்தவர்கள் இருக்கையிலும் இளையவனான சிருங்க புஜனுக்கே இளவரசுப் பட்டம் கட்டவேண்டுமென்று அபிப்பிராயப்பட்டு அதை அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரசனும் உங்கள் இஷ்டப்படியே ஆகட்டுமென்று மிக்க மகிழ்ச்சியுடன் அதனை அங்கீகரித்தான். அவ்வண்ணமே ஒரு நல்ல சுப

முகூர்த்தத்தில் சிருங்கபுஜனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டப்பட்டது.

### "நன்மை விதைத்தால் நன்மை விளையும்."

அன்றுமுதல் சிருங்கபுஜன் ரூபசிகையினுடைய யுக்தி ஆலோசனைகளையே தனக்கு வழிகாட்டியாகக் கொண்டு மனுநீதி தவறாமல் ராஜ்யங்களைப் பரிபாலித்து வந்தான். அன்றியும் திக்குவிஜயம் செய்து பகைவர் அனைவரையும் வென்று பெரும்புகழ் படைத்து தகப்பனுக்குப் பின்பு தானே சக்ரவர்த்தியாயினன். இவ்வாறு தான் அரசனாயிருக்கையிலும் சிருங்கபுஜன் தன் தமயன்மாரை அலக்ஷியம் செய்யாமல் மிக்க கவுரவமும் பெருமையுமாகவே அவர்களை நடத்திவந்தான்.

### பொறுமையும் பொறாமையும்—தாரதம்மியம்.

பார்த்தீர்களா பொறுமையின் சிறுமையும் பொறை யுடைமையின் பெருமையும்! சிருங்கபுஜனும் குணவதியும் இடையே நின்று அரசனை வேண்டிக்கொள்ளா திருப்பார்களாயின் பொறாமைப் பட்டவர்களுடைய கதி என்னவாக முடிந்திருக்குமோ யோசித்துப்பாருங்கள்! தமக்குத் தீங்கிழைத்தவ ரிடத்தும் நன்மையே செய்யக்கருதும் நற்குண முடைமையினால், குணவதிக்கும் சிருங்கபுஜனுக்கும் நேர்ந்த விபத்துக்களெல்லாம் தாமே விலகியது மல்லாமல் அவர்களுக்குக் கடைசியில் ஒப்புயர்வில்லாத பல பெருமைகளும் உண்டாயின வல்லவா?

"அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்."

"அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து."

முற்றும்.

—:(*):—

## Negapatam Mounaswami: An Interiew & a Sketch.

## நாகபட்டணம் மௌன சுவாமிகள்.

*(By a retired Tahsildhar.)*

### ஒரு சம்பாஷணை.

"நாகபட்டணம் சுவாமி" எனப்படுவார் வேதாரணியம் வந்திருக்கின்றனர். அவர் தீட்சா நாமம் அருளம்பலசுவாமி யென்று தெரிய வருகிறது. நாகப்பட்டணம் முதலிய பல விடங்களிலிருந்து அநேகர் இவரை தரிசிப்பதற்காக தினந்தோறும் இவ்விடம் வருகின்றனர். சுவாமிகள் மௌனவிரதத்தை இப்போது நியமமாய் அனுஷ்டிக்கவில்லை. அவசியமான மட்டும் வசனிக்கின்றனர். நானும் அவர்களைப் பார்த்து கவனிக்க வேண்டுமென்று சில முறைகள் போனேன். முதல் மும்முறைகளிலும் அவர்கள் வாக்கு மௌனம் சாதித்திருந்தனர். நானும் "நாவடக்கி நாணாமல் நாணிச் சில நேரமிருந்து நழுவி வந்து கொண்டிருந்தேன்." நான்காவது முறையும் போய் முன்போல் நாவடக்கமாயிருந்தேன். அச்சமயம் சுமார் காலை பத்துமணி யிருக்கும். சுவாமிகள் தரிசனத்திற்காக வந்திருந்த ஒரு காஷாயப் பரதேசி ஒரு சேவல் வைத்துக்கொண்டிருந்தார். அக்கோழி அந்நேரம் இரண்டு முறை கூவிற்று. சுவாமிகள் கோழியும் காலந்தப்பிக் கூவுகிறதே என்றார். சுவாமிகளுடன் வார்த்தை வசனிப்பதற்குச் சமயம் நேரிட்டதென்று "கோழிக் கொடியோன்" (குக்குட த்வஜன்) என்று வசனமிருக்கின்றதே, அப்பதத்தை யடைந்த கோழிக்கும் "காலவரம்புண்டோ"? என்றேன். இவ்வுலகத்தில் காலவரம் பின்றேல், காரியங்கள் முறைபாய் நடவாவென்றார்கள்.—அம்மட்டில் நானடங்கி, எனக்கிருந்த ஒரு சந்தேகத்தைச் சரிசெய்துகொள்ள வேண்டி "மனிதர் விஷயத்தில் கேவலாவஸ்தை எக்கலையில் எத்தத்துவங்கள் அடங்கியுள்ளன"? வெனச்

சுவாமிகளை வினவினேன். "வித்தியா கலையில்" என்றார்கள். பின்னும் வினவுகையில் "அந்தர் யோகத்தில் பார்க்கவேண்டும். இம்மாதிரி ஞான விஷயங்களைப்பற்றிப் பேசுவதுந் தப்பு, பேசாமல் விடுவதுந் தப்பாகும்" என்றார்கள். நானும் அடக்கமுற்று வந்து விட்டேன்.

2. சுவாமிகள் ஸ்வயமாய்ச் செய்யுள்கள் செய்து உடனே அநேகவற்றை விளக்கில் கொளுத்தி விடுகிறார்கள். அவர்கள் வெகு சாதாரணமாய் பாக்கள் ஸ்வஹஸ்தமாய் கால விளம்பமின்றி யோஜனையில்லாததுபோல் எழுதுகிறார்கள். அவர்கள் எரித்து விடாமலிருந்த "ஞானானந்தி" என்னும் தலைப்புடன் செய்திருந்த 11 பாக்கள் அடங்கிய ஒரு துண்டுக் கடிதம் என்னிடம் கிடைத்தது. அதன் காப்புச் செய்யுளில் "தையலென் மகள் சாகாவரமே" என்று ஒரு அடியிருந்தது. மறு தடவை அவர்களை நான் தரிசிக்கப்போயிருந்த காலத்தில் குறித்த செய்யுளில் "என் மகள்" என்றிருப்பதென்னவென்று கேட்டேன். "என்" என்றால் தன்னில் பார்க்கப்பட்ட ரூபமல்லவென்றார்கள். தபோதனர் மகம்புரிந்ததினால் விளைந்த சக்தியை மகள் எனலுமாம். மகள் தந்தையின் தலையிலுந் தங்குவள்: தாய் தூரத்திலிருப்பாள் என்று பிரதியுத்தரம் சொன்னார்கள். சுவாமிகள் இந்த சமயத்தில் தொடர்ந்து வசனித்த விஷயங்களாவன:—

நான் 12-வயதில் பள்ளிக்கூடத்தில் வாசிக்குங் காலத்தில் சமீப கற்பூரப் பிள்ளையார் கோவிலில் காலைமுதல் 12-மணிவரையில் தியானத்திலிருந்து விடுவேன். பின்பு பள்ளிக்கூடம் போகிற காலங்களில் உபாத்தியாயர்கள் அடிப்பார். ஒருதினம் "கற்றதனாலாயபய னென்கொல் வாலறிவனற்றாடொ ழாரெனின்" என்ற குறளைப் படித்து அதன் பொருள் என்னவென்று உபாத்தியாயரைக் கேட்டேன். அவர் சொன்ன பொருள் எனக்கிணங்கவில்லை. உடனே சிலேட்டை அவர்பேரில் எறிந்துவிட்டு நான் போய்விட்டேன். பின்பு சிலகாலம் கற்பூரப் பிள்ளையார் கோவிலில் நந்தவனத்துக்கு தண்ணீர் இரைப்பது முதலிய பணிவிடைகளைச் செய்துகொண் டிருந்தேன். சிலகாலமப்படி யிருந்தபின் கதிர்காமம் போனேன். அங்கு சில காலம் தியானபரனாயிருந்துகொண் டிருக்கையில் வசனிப்பது எனக்கு ஒவ்வவில்லை. மூலாதாரத்தில் சூடுகாணும்: அக்காரணத்தால் நான் வசனிப்பதை விட்டுவிட்டேன். அக்காலத்தில் தியானம் பயிலப் பயில அருள்தோற்றம் கிடைத்தது. பின்பு ஊர்வந்தேன். பந்துக்கள் என்னை உத்தியோகத்துக்காகப் படிக்கவேணுமென்று இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் வைத்தார்கள். நான் ஸ்கூலுக்குப் போவதாக எங்கேயாவது கண்ணொளிவாய்ப் போய்விடுவேன். அதன்பேரில் சாகுபடித் தொழிலாவது செய்யென்று கல்யாணம் செய்துகொள்ளச் சொன்னார்கள். ஞானத்தைக் கொடுக்கும் பெண்ணையல்லவோ கல்யாணம் செய்துகொள்ளவேண்டுமென்று நான் சம்மதிக்கவில்லை. என் தந்தை வைத்திருந்த சில ஞானநூல்களைப் படித்து சிலகாலம் சிவபூஜை செய்துகொண்டிருந்தேன். அதிலும் பிரயோஜன மில்லையென்று கண்டு அந்தர்யோக பூஜை ஆரம்பித்து விட்டேன். இந்த மௌனயோக நிலையில் என்னைப் பேச வைக்க வேணுமென்று சிலர் நெருப்பினால் சுட்டு உபத்திரவம் செய்தார்கள். பின்பு நாகப்பட்டணம் வந்து விட்டேன். கடைசியில் குரு, தன்னையும் நிலையையுங்காட்டி இனி உன் விருப்பப்படி இருக்கலாமென்று ஆக்ஞாபித்தார். அதன் பின் நான் வாக்கு மௌனத்தைவிட்டு வசனிக்கின்றேன். பள்ளிக்கூடத்தை விட்டு 20-வருஷகாலமாய் அப்பியாச வழியிலிருக்தேன். இவ்விபரப்படி சுவாமிகளுக்கு இப்

போது 32-வய தென்கலாம். அவர் பிறந்த ஜனனபூமி யாழ்ப்பாணத்தைச்சேர்ந்த அரிவாய் வடக்கு என்னும் ஊர் என்றும், பிறப்பு முதல் பிரமசரிய ஆசிரமமென்றுந் தெரிகிறது.

3. இப்பால் சிவன்ராத்திரி தினம் சுவாமிகளின் தரிசனத்துக்குப் போயிருந்தேன். மேல் சொன்ன ஞானானந்தி என்னுஞ் செய்யுளில் இரண்டிடத்தில் நமது பாவியலுக்கு ஒவ்வவில்லை யென்று ஒருவர் சொன்னதைச் சொல்லி எனக்குத் தோற்றின இரண்டு பதங்களை இணைக்கலாமா வென்று கேட்டேன். அந்த சமயத்தில் வெகுவாய்வசனித்தார்கள். அதைச் சுருக்கிச் சொல்லுகின்றேன். நிலையை யறிந்த அனுபவிகள் சில காலங்களில் உத்ஸாகமாய்ப் பாக்கள் செய்வார்கள். அனுபவங்களை இவ்வுலக எழுத்தில் எழுதும்போது அது சில மட்டில் உலகத்துக் கொவ்வாது. நிலையை யடைகிறவரையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படிகளில் அந்தந்தப்படியில் செய்கின்ற பாவனைக் கொவ்வ குரு ரூபமாயும் அரூபமாயும் தோன்றி மேல்படிக்கு வழிகாட்டுவார். **பாவனையற்றுத் தத்ஸ்வரூப மாகிறதே** நிலை. அந்த நிலையின் உண்மைகள் கீழ்நிலைகளுக்கு அமையா. சந்திரன் குரு பத்னியுடன் விபசாரம் செய்தான் என்பது திருஷ்டாந்தம். இதுதான் அவர்கள் விவகரித்ததின் சுருக்கம். ஆகையினால் இச்செய்யுள்கள் சுவாமிகள் செய்த ஸ்வஹஸ்த லிகிதப்படி யிருக்கின்றன.

இதில் மேற்சொன்ன 11-பாக்களுக்கு அதிகமா யிருக்கப்பட்ட 5-செய்யுள்களில் "என் மகள்" என்னும் வசனத்தைப் பற்றிச் சம்பாஷித்தபோது மேல் சொன்ன துண்டுக் கடிதத்தை என்னிடமிருந்து வாங்கி முன் எழுதிய பாக்களுடன் வெகு லாகவமாய் எழுதிச் சேர்த்தார்கள். ஆனால் பின்னிட்டு மூன்று பாக்களை உலகத்துக் கொவ்வாதென்று எடுத்துவிடச் சொன்னார்கள். அம்மூன்று பாக்கள் போக 13-பாக்களை இத்துடன் சேர்த்திருக்கிறேன். மற்றொரு உலக விவகாரத்தையும் மறுதளித்தார்கள். பிரமா முடியைத் தேடிக்கண்டதும் அதற்கு தாழம்பூ சாட்சி சொன்னதும் இவ்வுலகத்தில் எழுதப்பட்ட சாஸ்திரங்களில் சாதித்திருக்கிறபடி பொய்யென்பதை மறுதளித்து மெய்யே என்றார்கள். நான்கு முகங்களையும் உன்முகத்தோடு ஒரு வழிப்படுத்தி தியானிக்கும்போது மௌனநிலை காணவே காணும். மயக்கமுடன் நிகழும் தியானம் நிலையைக் காட்டாது: அதைத்தான் விஷ்ணு காணவில்லை என்று சொன்னார்கள். அதுவும் மெய்யே **"தலைதாழ்ந்துக்கோண்டிருக்கும் தாழம்பூ"** மௌனநிலையை யடைந்த பெரியோர்கள் உலகத்தில் சிறியவர்கள்போல் திரிவார்களென்பதைக் காட்டும் உபமானம். தாழம்பூவின் பின்னும் சில விசேஷங்களையும் வெளியிட்டார்கள். நான் சுவாமிகளை வசனிக்கும்படி தூண்டி வருத்துவதாய் அஞ்சுகிறேன் என்றேன். ஞானமடைய வேணுமென்ற விசாரமுடையவர்களுடன் சம்பாஷணை செய்வது தமக்குத் துன்பமன்று, இன்பமே என்றார்கள். ஆனால், அவர்கள் தற்கால தேஹஸ்திதியில் வசனிப்பது கஷ்டத்தைக் கொடுக்கத்தக்கதாகவே யிருக்கிறது.

———:o:———

## சுவாமிகள் செய்த பாக்கள்.

(ஞானானந்தி மவுனமுடி.)

———:++:———

1. தானந் தருமம் தழலென நோக்கி
நானுநீயு மில்லை யென்றாகி
மோனந் தன்னின் முளைத்தனை யாதலா
லானந்த வல்லியென் றறைவார் பாரே.

### தந்தை சந்திர நோக்கு.

2. மந்திரமென்பதை வழுத்தவு மாட்டான்
தந்திரமென்பதைச் சாரவு மாட்டான்
எந்திரமென்பதை யெழுதவு மாட்டான்
சந்திரக்குடையை தரித்தான் பாரே.

3. நோக்க முப்புர நொடியி லெரியுந்
தாக்கப் பூமி தானிலா தாகும்
வாக்கு மன்மா மாயை யில்லாள்
ஆக்கவருள் தானம் பலமாமே.

4. சந்திர சூரியர் தாங்கி நிற்கச்
சுந்தரவல்லி சோதியாவள்
மந்திரமணியும் மனத்தேயாகும்
பந்தமில்லாப் பாவைகாணே.

5. ஞானானந்தி தோழிதலைவி
தானாப்பிறந்த தன்னொளி நங்கை
ஆனந்தவல்லிக் கழுக்குமுண்டோ
மானமில்லா மல்லிகையாளே.

6. பணிசெயும் பாங்கியர் பாரோரெல்லாம்
அணியாமருக னணையிலணையும்
கணியாவிடுகிற் காதலின்றாகும்
மணியேசெல்வ மணியாம் மணியே.

7. தாமரையாளுந் தங்கமாவள்
பூமனைநோக்கப் புன்மலமின்றாம்
நாமகளுரைக்க நாளுமின்றாம்
சாமரைவீசுஞ் சதுர்மறைதானே.

8. நான்மறையாக நவிலும் பூரணம்
தான்பதினாறுகலை மதியாகும்
அருணன்பொருந்த வாயிரத்தெட்டும்
தருவதுமேலாத் தங்குந்தானே.

9. அகரமுன்இகர மமையா வாதலின்
உகரம் மகரமொடுறவு கொண்டாட
இகரமிடை நெருப்பாறதாக
ஒடுதல்மயிரின் பாலமதாகும்.

10. அரத்தையெடுத்து அராவியறிந்திடலாம்
இரத்தையெடுக்கு மிராகமேன்—உரத்து
வரத்துகின்றவாழை வட்டின்மேலோர் குட்டி
மரத்துநின்ற தாகும்மதி.

11. தத்துவர்களெல்லாந் தழலாகவெந்ததினால் [னால்
முத்திவழியெல்லாம் முழுமேடாய்ப் போனதி
சித்தாதிகள் செகத்துத்திரண்டு அமைந்ததினால்
வித்தாதியெல்லாம் விளைபயிர்களாகியதால்
முத்தாதியெல்லாம் முனைவிண்டலர்ந்ததினால்
சுத்தாத்துவிதப்பறவை சூழ்ந்து அமுங்கினனே.

12. எழடுக்குமெத்தையிலே யேற்றமணியாசனத்து
தாழவரிசையெல்லாந் தத்துவர்களாச்சமைக்க
காளமரவெடுக்கக் கந்தருவர் பூச்சொரிய
நாளுமிதுவாக நான்மாடமேளுமோ.

13. சந்திரருஞ் சூரியரும் தடைகயிறுதானணைக்க
மந்திரத்தின்தட்டேறி மாதவத்தின் பூநாற
சுந்தரமேயானந்தச் சொகுசுள்ள கண்மணியே
தந்தரத்தைவிட்டு வருளம்பலத்திலாடாமோ.

வேதாரண்ய வாசி.

—:(*):—

## "Pushing to the Front, or Success under Difficulties." *

## "முன்னுக்கு வருவ தெப்படி ?"

———

"சினமிறக்கக்கற்றாலும் வித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே !"—
[தாயுமானவர்.

"முன்னுக்கு வருவதெப்படி?" யென்னும் கேள்வி மிகவும் முக்கியமானது. ஒவ்வொருவரும் இக்கேள்விக்கு பதிலுரைக்காவிட்டாலும் பதிலுணர்ந்தே தீரவேண்டாம். இல்லாவிட்டால் ஆள் முழுகிப்போனான். "ஐயா! என் குழந்தையைக் கண் பார்த்துக் கண்திறந்து ஆளாக்கிவிடவேண்டும்—அந்த பாரம் தங்களதாக வகிக்கவேண்டும்!" என்று ஒரு வாக்குப்பிறந்தது. அது ஒரு ஸ்திரீயின் குரலாயிருந்ததால் அதைக்கேட்ட திண்ணைப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் தான் பரீத்துப் படித்துக்கொண்டிருந்த ஓலைச்சுவடியை மடியில் வைத்துக்கொண்டு அவ்வார்த்தை சொன்னவரை ஏறிட்டுப் பார்த்தார். பார்க்கவும் தன்முன் 35-வயதுள்ள ஒரு பிராமண ஸ்திரீ தனது ஒரே புத்திரனை யழைத்துக்கொண்டு வந்து உபாத்தியாயரிடம் ஒப்புவிக்கச் சொ

* By Orison Swett Marden, V. Kalyanarama-Iyer & Co. Esplanade, Madras, Re. 1.

ன்ன வசனம் என்று தெரிந்தது. பிள்ளையைப் பள்ளிக்கூடத்தில் போட வந்த தாய் உபாத்தியாயரைப் பார்த்து மேற்கண்டபடி சொன்னாள்.

உபாத்தியாயர் தாயை ஏறிட்டுப் பார்த்துவிட்டு மூக்குக்கண்ணாடியைத் தூக்கிக்கொண்டு பிள்ளையையும் ஏற இறங்கப் பார்த்தார். பார்த்துவிட்டு "அம்மா உங்கள் பிள்ளையாண்டான் முன்னுக்கு வருவன்! பயப்படவேண்டாம்!" என்று அபயஸ்தம் கொடுத்துக் குழந்தையைத் திண்ணையில் உட்காரச் சொன்னார். இந்தச் சம்பாஷணை நடந்து இப்பொழுது 2-வருஷங்களுக்கு மேலாகிறது. அந்தத் திண்ணைப்பள்ளிக்கூட உபாத்தியார் ஆளாக்கிவிட்ட பையன் இன்னமும் ஆளாகவே யிருக்கிறான்.

"அடே பையா! இங்கேவா! இப்படி யுட்கார்" என்று உபாத்தியாயர் தன் பக்கத்திலுள்ள இடத்தைத் தட்டிக்காட்டி உட்கார வைத்துக்கொண்டார். பையனும் அடங்கி யொடுங்கி வாத்தியார் பக்கலில் உட்கார்ந்தான். வாத்தியார் அரிச்சுவடியை யெழுதி மஞ்சள் தடவி கணேசுவர பூஜைசெய்து முடித்து மங்களஹாராத்தியும் எடுத்துக் குழந்தையை ஆசிர் வதித்தபின் "அப்பா நான் சொல்கிறேன், நீயும் கூடவே சொல்லு," என்று குழந்தையின் சிறு கையைப்பிடித்துக் கொண்டு பிள்ளையார் சுழியைச் சுட்டிக்காட்டி "ஓம்" என்று பிரணவ மந்திரத்தை ஓதினார். குழந்தையும் கணீரென்று "ஓம்" என்று சொன்னான். அந்த பிரணவத் துவனியைக்கேட்ட உபாத்தியார் உள்ளம் பூரித்தது. உள்ளம் பூரிக்கவே அவர் முகமும் சூரியனைக்கண்ட தாமரைமலர்போல் மலர்ந்தது. "ஓம்-நமோ-நாராயணாய-ஸித்தம்"—என்று உபாத்தியாயர் கம்பீரமாகச் சொன்னார். குழந்தையும் கம்பீரமாகத்தானே "ஓம்-நமோ-நாராயணாய - ஸித்தம்" என்று சொன்னான். "பலே!" என்று சொல்லி உபாத்தியாயர் குழந்தையை முதுகில் தட்டிக்கொடுத்தார். இந்த ஒரு நிமிஷத்தில் குரு சிஷ்யபாவம் ஏற்பட்டுவிட்டது. உபாத்தியாரும் தனது புதிய சிஷ்யனுடைய அளவையெடுத்து மதிப்பிட்டுத் தம்முடைய ஜோதிர் மனசில் குறிப்பிட்டு வைத்துக்கொண்டு விட்டார்.

அநாஹத சப்தம் நிஷ்களங்கமான மனதையுடைய குழந்தைகளுடைய வாக்கின் மூலமாக வரும் பொழுது அதனுள்ளிருக்கும் "துவனி" நாதாகாரமாய், நாதத்தின் உள்ளிருக்கும் பிந்துரூப ஜோதியை விளங்கச்செய்யும். அலையு மனதை யடக்கக் கற்றாருக்கு இது வித்து மரத்தைக் காட்டுவதுபோல, பூர்வ வாசனையோடு கூடிய மனத்தின் குணத்தைக் காட்டிவிடும். விக்னேசுவர பூஜை செய்து முடித்து சித்த விருத்தி நிரோதம் செய்து அலையுமனத்தை யடக்கிச் சிஷனை அருட்கண்ணால் பார்த்து ஆசிர்வதித்து "ஓம் நமோ நாராயணாயஸித்தம்" என்ற மந்திரத்தை யோதிவைக்கக் குழந்தை பிரஹலாதனைப்போல அதை சுபாவமாகவே பழகிய மனசால்பற்றி உள்ளம்பூரிக்க "ஓம் நமோ நாராயணாயஸித்தம்" என்று கம்பீரமாகச் சொல்லவே உபாத்தியாயருக்குக் கொஞ்சநஞ்சமிருந்த சந்தேகமும் தீர்ந்து போய்விட்டது. இந்த சந்தேகம் தீரவும் "பலே" யென்று உபாத்தியாயர் குழந்தையைத் தட்டிக்கொடுத்தார்.

"ஹரி: ஓம் நமோ நாராயணாய ஸித்தம் அ, ஆ, இ, ஈ; உ, ஊ.............." என்று அதன்மேல் அக்ஷராப்பியாசம் செய்து வைக்கலானார்.

அந்தக் குழந்தை இப்பொழுது உருப்பட்டு ஆளாகிப் பிரபலமாகப் பேர்பெற்றிருக்கிறான்.

பேரும் பிரக்கியாதியும் பெற்று விளங்கினாலும் நாமரூபப் பிரபஞ்சத்தின் மாயாலீலையைக் கண்டு மகிழாதவனாகி ஸத்தியத்தைக் கண்டனுபவிக்கவேண்டுமென்று அவாக்கொண்டு அவா

அறுத்து அதற்காகப் பன்னிரு ஆண்டு தீக்ஷை வகித்து உழைக்கலானான்.

"ஸத்தியம் மாதா, பிதா ஞானம், தர்மோப்ராதா, தயாஸகா, சாந்திப்பத்நி, க்ஷமாபுத்ரா, ஷடைதேமமபாந்தவா."—என்றபடி அவன் தீக்ஷை பெற்று ஸத்யாநந்த ஸ்வரூபிணியையே மாதாவாகக்கொண்டு சரணடைந்து அந்த ஸத்யாநந்தஸ்வரூபிணியின் கிருபையால் பிதாவாகிய ஞானத்தை யறிந்து, தன்னுடன் பிறந்த (பிராதா) பிறப்பாகிய தர்மத்தைக் கைவிடாது; குழந்தைப் பருவமுதல் தன் அறிவு வளர வளரத் தன்னுடன் கூட விருந்து வளர்ந்த தயா சிந்தையே ஸகபடியாகக்கொண்டு, குழந்தைப் பருவமும், பால்யப் பருவமும் கடந்து கௌமாரப் பருவம் வந்தெய்திய காலத்தில் சாந்தமில்லாதவனுக்குச் சக்தி யில்லையென்பதை யுள்ளுணர்ந்து தான் சக்திமானாகவேண்டி சாந்தி தீக்ஷை பெற்று சாந்திப் பத்நியை யடைந்து சுகபோக மனுபவித்து பத்தாமாண்டில் பாலசூரியனைப்போல் க்ஷமாபுத்திரனைப் பெற்று புத்திர ஸம்பத்துண்டான விசேஷத்தால் அக்குழந்தைக்குபதேசிக்கும் நிமித்தம் ஞான பீடமெய்தி "பிதா ஞானம்" ஆகி ப்ரஹ்மஸ்வரூபமாய் பிரஹ்மாநந்த வெள்ளத்தில் மூழ்கிக் கிளம்பி துக்க ஸாஹரமாகிய ஸம்ஸாரத்தைக் கனவுபோல் கண்டு நனவில் வியவகாரம் செய்தும் துரீயநிலை கலையாது தூங்காமற்றூங்கி "துணைநலம்" கருதிப் புத்திரனுக்குப் பிராதாவாக விருந்து வருகிறார். "அப்பா இந்த உலகத்தில் முன்னுக்கு வருவதெப்படி?" யென்று குழந்தை யொரு வசனம் கேட்க, அதற்கு ஆரியரான பூஜ்ஜியர் "குழந்தாய் முன்னுக்கு வர ஒரே வழி யுண்டு. அதை உலகத்தார் பலவிதமாகச் சொல்வர். ஆனாலும் ஆராய்ந்து பார்த்தால் **வழி யொன்றே** என்று ஓதலானார்.

இப்படி ஓதிய மறுநாட்டானே "முன்னுக்கு வருவதெப்படி?" யென்னும் விஷயத்தை யொட்டி அமெரிக்கா தேசத்து வித்வா னொருவர் சிறு புத்தக மொன்றெழுதி யிருக்கக் கண்டு அதை இந்திய வாலிபர்களுக் குபயோகமாகும்படி பிரசுரித்த புஸ்தக வியாபாரம் கலியாணராமய்யரிடம் பெற்றுக் குழந்தையிடம் கொடுக்கலாமென்று சென்றார்.

வழியில் ஒரு உத்யோகஸ்தர் அதை வாசிக்க வாங்கிக்கொண்டுபோய் ஒரு வார மேழு நாளில் தருவதாகச் சொல்லி சரியாக எட்டாவது மாசத்தில் மனமுவந்து கொடுத்தனுப்பலானார். அதைக் கண்டதும் பழைய ஞாபகங்கள் வர அப்புஸ்தகத்தில் கண்டவைகளையே சுருக்கிச் சொல்ல வேண்டுமென்கிற எண்ண முதித்தது.

உள்ளே யுதிப்பதான சங்கல்பத்தை வாயால் சொல்லி வாயிழந்து போவதிலும் மௌனமாயிருந்து சாதிப்பது ஞானிக்கு அழகு. ஞானியென்றால் அறிவுடையோன். "**அன்பே அவன்: அறிவே சக்தி**" யென்றிருப்பதால், அறிவுடையோன் தானே சக்திமானாகவேண்டும். அந்த சங்கல்ப சாதன சக்தி யில்லாவிட்டால் அவன் அறிவுமயமானதற்கு அடையாள மென்ன? ஆகையால் "அறிவுடையார் எல்லா முடையார்" என்கிற பொய்யாமொழிப்படி, **அறிவுடையார்** தம் சங்கல்பசாதன சக்தியால் **எல்லா முடையராவர்: அஃதிலார்** (சங்கல்ப சாதன சக்திக்குக் காரணமான அறிவுதானத வில்லாதார்) **என்னுடைய ரேனும்**— "இடம் பொருள் ஏவல்" என்கிற பஹிர் சாதனங்கள் என்னதானுடையரேனும் — **இலர்** (அவை யில்லாதவர்க் கொப்பாவர்.). ஏனெனில் சங்கல்ப சாதன சக்தி (நினைத்தது முடிக்கு மாற்றல்) இன்றி, கர்மவசத்தனாய் கர்மத்தைச் செய்து பணத்தைச் சேர்த்துப் பிணத்தைப் பூதம் காப்பதுபோல் அதைக் காப்பதே கவலையாக

வுள்ளவன், இடம் பொருளேவலிருந்தும் என்ன செய்யப் போகிறுன்? ஒருசுகத்தையும் காணுன் என்றபடி.

நாணயசாலேயில் நாணயங்கள் அச்சிடும் யந்திரம் பணத்தை மூட்டை மூட்டையாகச் செய்து வைக்கிறது. அதனுல் அதற்கு யஜஸ் ஏதாவதுண்டா? அஃதேபோல், தானுகத் தனே யறிந்து தன் ஆத்மானந்தத்தை யனுபவிக்கத் தெரியாதவன் பிறருடைய க்ஷேமத்தைக் கோறி யென்னசெய்யப் போகிறுன்? ஒன்றுமில்லே. ஆகையால் இச்சிறு புஸ்தகத்தில் 15-அதிகாரமாகச் சொன்னதை யெல்லாம் சுருக்கி பஞ்சதசாக்ஷரிஸ்தவமாக முன்னமே சொல்லியிருக்கிறேம். யோகநிலேயிலிருந்து ஏகாக்ரமாகச் சொன்னதையே யிப்பொழுது க்ஷேமநிலேயிலிருந்து சாதாரணமாய்ச் சொல்ல விரும்புகிறேம். ஏனெனில் வழி யொன்றே: அதைப் பல்லோர் பலவிதமாகச் சொல்லுவர்.

(1) "சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர், சத்தியிழந்தது தன்னே மறந்ததால்' - ஆகையால் சமயம் வாய்க்கும் வாய்க்குமென்று காத்திராதே. ஸ:மப:—அவன்மயமானுற்கு சந்தர்ப்பத்தை யுண்டாக்கும் சக்தியுண்டு என்பதை யுணர்ந்து சந்தர்ப்ப பந்தனுயின்றி சந்தர்ப்ப விமுக்தனுய் சந்தர்ப்பங்களே உண்டு பண்ணும் திறமைவாய்ந்த சக்திமானுகப் பார். இதுதான் முன்னுக்கு வரும் வழியில் முதற்படி. இச்சிறு புத்தகத்தின் முதலதிகாரத்தின் கருத்து மிதுவே. பஞ்சதசாக்ஷரியின் முதலக்ஷரத்தின் அதிஷ்டானப் பொருளும் இதுவே. அதுதான் சக்திமான்.

(2) சந்தர்ப்பமேற்படவில்லே யென்றிருப்பவன் சுத்த முட்டாள். எனக்குக் காசில்லே, பணமில்லே, உறவில்லே, சிபார்சில்லே யென்று சொல்லி யழுது பரிதபிப்போன் அழுமூஞ்சியாகவே யிருந்து ஆயுஸ்கால முழுவதும் அழுதுகொண்டு சாகக் கடவன். அவனுக்குப் பணமிருந்தாலும் பிணமே யாவான். "இங்கற்றூர்க்கங்குண்டு" என்றபடி இல்லாமையைப் போல் (வறுமையைப்போல்) தூண்டுகோல் வேறு இல்லே. "இல்லானே யில்லாளும் வேண்டாள்: ஈன்றெடுத்த தாய்வேண்டாள்" என்று சொன்னது பணமில்லானேக் குறித்துச் சொன்னதாகப் பணப்பேய்ப் பிடித்தவர்கள் சொன்னுலும், அதன் உண்மையானபொருள் அது வல்ல. பணம் ஜடப்பொருள்: ஜீவன்சித்ரூபம்."சித்திலாது ஜீவனில்லே" யேயன்றி, பணமிலாது புருஷனில்லே யென்பது சரியல்ல. புருஷன் சின்மயன்: பணம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஜடமாகிய அது அவனே யென்னசெய்யும்? பணமும் ஓடும் ஒன்றேயென்று மதிப்பவனேப் பணம் என்ன செய்யும்! அடிமையாயிருந்துதவினுலுதவலாமன்றி அவனே அடிமைப்படுத்த அதனுல் முடியாது. ஆதலால் "இல்லானே" யென்றது அறிவிலானேயே குறித்தலாகும். அறிவிலானுக்கு ஸங்கல்பசாதன சக்தியில்லே. நினேத்தது முடிக்கு மாற்றலில்லானே இல்லக்கிழத்தியாகிய"சக்திக்குவித்தாம்சாந்திப்பத்னி"வேண்டாள்—விரும்பியடையாள். ஈன்றெடுத்ததாயாகிய ஸத்யானந்த ஸ்வரூபிணியும் அவனே விரும்பி யடையாள். ஏனெனில் அவனிடம் அஹத்தூய்மையில்லேயாதலால்."வாய்மையால் அஹம் தூய்மையாம்." அஹத்தூய்மையில்லானே வாய்மை (ஸத்யம்) எப்படிச் சேரும்? ஆகையால் இடம் பொருள் ஏவல் இல்லாமையை வறுமைக்குக் காரணமாக நினேக்காமல், சங்கல்ப சாதனசக்தி விசேஷத்தால் நினேத்ததை முடிப்பதற்கான சாதனசாதகங்களேத் தனது ஆத்மசக்தியால் உண்டுபண்ணி அதனுல் (காரணஸித்தியினுல்) காரியஸித்தியாகப் பார்ப்பவன் யாரோ அவனே முன்னுக்கு வருபவன்; அதுவே முன்னுக்கு வரும் வழியுமாம். இதற்கு இஷ்டதேவதையாக விருந்துதவும் இரண்டாவது அக்ஷரத்தின் அதிஷ்டானப் பொருள்சக்தி.

3. மூன்றாவது "காலமில்லை" யென்று சொல்லுவோன் மதிகெட்டவன். காலம் வேண்டுமென்றால் அது இல்லாமற் போகாது. இஷ்டமிருந்தால் எல்லாம் நடக்கும். முதலில் தோற்றால் அதனால் குற்றமில்லை. தோற்றவன்தான் ஜயிப்பான். உதாரணமாகக் காமனைப்பாருங்கள். சிவனிடத்தில் தன் பாணங்களைச் செலுத்தி முதலில் எரிபட்டுத் தோற்றானானாலும், பிறகு பிழைப்பூட்டப்பெற்று ரதிபுருஷனாக விருந்து உலகெங்கும் தன்னாக்ஞை செல்ல அரூபியாயிருந்தாண்டு வருகிறான். ஆகையால் இஷ்டசித்தி யுண்டானவனுக்குக் கஷ்டமொன்றுமில்லை. இதற்கு அதிஷ்டானதேவதை காமனே.

4. காலமில்லை யென்பவனிலும் இடமில்லை யென்பவன் கேடுகெட்டவன். அவனிலும் பொருந்தா விடத்திலிருப்பவன் "இடங்கேடு கெட்டவன்." காலதேசவர்த்தமானங்களையறிந்துணர்ந்தாய்ந்து நடப்பவன்தானே அறிவாளியாதலால் அது தெரியாதவன் "இடங்கேடு கெட்டுத்தானே" பிழைப்பன். அதுஒரு பிழைப்பல்ல. ஆனையும் நிலத்தைவிட்டு ஜலத்திலிறங்கினால் முதலை வாய்ப்பட்டுத் தவிக்கும். அப்படியே முதலையும் ஜலத்தைவிட்டு நிலத்தி லேறினால் இடங்கேடுகெட்ட பிழைப்புப் பிழைக்கவேண்டும். அதன் பலமெல்லாம் துர்ப்பலமாகும். ஆத்மனாகிய மனிதன் இடங்கேடு கெட்டுத்தானே துர்ப்பலமடைகிறான். ஆகையால் ஸ்வபூமியாகிய ஞான பூமியைவிட்டு அந்யக்ஷேத்ரத்தையடைந்து அறிவிழந்து தவிக்காதே. மனிதனுக்குரியதான ஸப்தபூமிகைகளையும் ஜயித்து ஸார்வ பௌமனாக விருக்கவேண்டும். இதற்கு அதிஷ்டான தேவதை "க்ஷிதி". (இடங்கேடு கெட்டவர்கள்= "round men in square holes").

5. ஜீவனோபாயம்:—ஜீவனார்த்தமான வகையென்ன தொழிலென்னவென்று சிறுவர்களும் வயதிற்பெரியவர்களான அறிவிற் சிறியவர்களும் தேடித்தேடி யலுத்துத் தயங்கிப் போகிறார்கள். பகவான் வர்ணாச்ரம தர்மத்தை யுபதேசித்தபொழுது பாரபக்ஷமாய் ஜாதியைத் தூக்கிவைத்துப் பேசினாரில்லை. எவனும் தன்னனுவலைத் தான்பார்த்து வருதலே நலம். "தன்னனுவல்" என்று சொன்னது தன்னைத் தேடிக்கொண்டுவரும். வந்ததைக் கைவிடாமலுழைப்பதே வர்ணாச்ரமதர்மம். ஒவ்வொருவனும் பூர்வகர்ம வாசனையால் கர்மத்தைச் செய்யவே பிறந்திருக்கிறான். கர்ம தர்மத்தை யுணர்ந்திருந்தால் எல்லாக்கர்மமும்ஒன்றே. நைஷ்கர்மஸித்தி பெறுதலே கர்மபல ஸித்தியாம். அது கர்மபல த்தியாகத்தால் ஸித்திக்கிறது. புவனேசுவரி இதற்கு அதிஷ்டான தேவதை.

6. ஜீவனோபாயம் சித்திக்க ஏகாக்ரசித்தம் அத்யாவசியமாதலால், சித்தவிருத்திநிரோதத்தால் ஏகாக்ரசித்தம் ஸித்திக்கப்பழகல் வேண்டும். கருமமே கண்ணாயிருக்க வேண்டும்.

"கருமமே கண்ணாயினர்"-"செவிநோக்கார், கண் துஞ்சார், செவ்வியருமையும் பாரார், எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்" என்பதைக் கவனிக்கவேண்டும். இதற்கு அதிஷ்டான தேவதை சூரியன்.

7. செய்வன திருந்தச்செய்: அன்றையும் அப்பொழுதே செய். போனதைக்குறித்து விசனமும்வருவதைக்குறித்து விசாரமும்வேண்டாம். அன்றன்றைப்பாடு அன்றோடே. அப்படியே அந்தந்த நிமிஷத்தின் வேலையை அப்பொழுதே பார்த்து முடிப்பாய். சந்திரனைப்பார். தினம் ஒருகலை குறைந்துகொண்டோ அல்லது வளர்ந்து கொண்டோ இருந்தாலும் அது குறைந்த-வளர்ந்த கலைக்காக விசாரப்படுவதில்லை. கடவுள் முடியில் தரித்த நித்திய கலையொன்றே அதற்கு நித்திய திருப்தியைத்தருகிறது. அஃதேபோல மனதை சித்தவிருத்திநிரோதத்தால் அடக்கியாண்டு அவ்வப்போது செய்யவேண்டிய கடமையைத் தாழ்வின்றி யுடனே செய்து நித்திய

திருப்தியடைவாய்! இதற்கு அதிஷ்டானதேவதை சந்திரனே.

8. தன்னையறிந்து மறக்காதவன் தாழாமற்றுழ்ந்து தன்னியனாய் வாழ்வானாதலால் அவன் கோபதாப முதலிய மனோவிகாரங்களுக் காளாகாமல் நன்மாதிரியிற் பழகியிருப்பான். நல்வார்த்தையும் நல்லுபசாரமும் நல்லைசுவரியத்தைக் கொடுக்கும். அஃதாலாவது காசு பணத்தாலாகாது. இதற்கு அதிர்ஷ்டான தேவதை ஸ்மரா என்னும் ஸம்பிரதாய தேவதை.

9. மனக்கிளர்ச்சி தனக்குறைவை யெல்லாம் போக்கும். ஹம்ஸோஹம் என்று ஹம்ஸமந்திரத்தை யுச்சரித்து நீரைப்பிரித்து பாலைக் கொள்ளும் ஹம்ஸம்போல நித்யாநித்யவஸ்து விவேகம் நிறைந்த ஆத்மபுத்தியால், அநித்ய வஸ்துக்களை நீக்கி நித்யமான வஸ்துவில் மனதைச்செலுத்தி அதனால் வரும் உற்சாசத்தை வளர்த்துவரல் வேண்டும். இதற்கு அதிர்ஷ்டான தேவதை அர்த்தநாரீசுவராத்மஸ்வரூப ஹம்ஸ மூர்த்தியே.

10. சத்தாசாமாநிய சித்தி: சத்ரூபமாயிருத்தல், தன்னைத் தானறிந்திருத்தல், தானே தானாதல்,' என்றுள்ள மூவகை யனுபவமும் ஒன்று கூடினது சச்சிதானந்தம். சத்தைவிட சித்தும், சித்தைவிட ஆனந்தமும் சிரேஷ்டமாம். ஏனெனில் பின்னதில் முன்னவை யடக்கம். சச்சிதானந்தத்திலும் சாமான்யமான சகஜானுபவம் சிரேஷ்டம். அதுபோல புத்தி சாதுர்யத்திலும், புத்தி சாமான்யம் விசேஷம். புத்தி சாமான்யம் எல்லாருக்கும் பொதுவாயுள்ளது. புத்திசாமர்த்தியம் புத்தி தீக்ஷண்யம் பெற்ற சிலருக்கே யுரித்தாம். ஆகையால் புத்தி சாமான்யத்தால் சமயோசித சாமர்த்தியம் பெற்றுவாழல்வேண்டும். இதற்கு அதிஷ்டான தேவதை சக்ரம் என்னும் சக்ரராஜா.

11. தன்னையறிந்தவன் தலைவனாவன். தன்னையறிந்த தலைவனே தன்னை மதிப்பன். ஆகையால் தன்மதிப்பு வேண்டும். தன்னிடத்தில் தனக்கே மதிப்புண்டானால் தன்னியன் தானாய் தஹராகாச (திருச்சிற்றம்பல) தரிசனம் கிடைக்கும். இதுவே நடராஜ மூர்த்தியளிக்கும் ஆருத்ரா தரிசனம். தன்மதிப்புள்ள விடத்தில் தன்நம்பிக்கை யுண்டாகும். தன்நம்பிக்கையே (Self confidence) நன்னம்பிக்கையாம். இதற்கு அதிஷ்டானதேவதை இஷ்டசித்தியளிக்கும் வஜ்ரேசுவரி, அல்லது கந்யாகுமாரி.

12. குணமே மணமாய்ச் சக்தியுமாம். ஆகையால் குண ஸம்பந்நனாகல்வேண்டும். நற்குணம் தீக்குணம் என்று இரண்டு சொன்னாலும் தன்னையறிந்து தன்னிடத்தில் தானே நம்பிக்கை வைத்து த்ரிகுணாத்மனாயிருந்து பட்டதெல்லாம் போதுமென்று த்ரிகுணாதீதனாய் (குணத்திரிபில்லாதவனாய்) இருத்தல் தானே "Character" என்று சொல்லப் பெறுவது. குணஸம்பத்துப் பெற்று குணாதீதனாயிருப்பது தானே "ஜயவிஜயீபவ" என்று எல்லாவற்றிலும் ஜயத்தைக் கொடுக்கும். இப்படியுள்ள ஜயராமன் தானே ஜயப்பிரதாபன்; மற்றவர் ஜயமெல்லாம் இந்த ஜயத்தின் முன் அபஜயமேயாம். இதற்கு அதிஷ்டான தேவதை பரா.

13. முன்னைப் பின்னை செத்தவனுக்கே சுடுகாடு தெரியும். அதாவது பிறந்திறந்து பிறவித்துன்பத்தைப் பூரா அனுபவித்தவனுக்கு பிறக்காமலிறக்கும் மர்மத்தின் குணம் தெரியும். அவன்! தானே சாவித்ரியைப் போலவும் நாசிகேதலைப்போலவும் யமதரிசனம்கண்டு யமதர்மராஜாவினிடம் உபதேசம் பெற்று அவருடைய அனுக்ரகத்தினால் மரணத்தின் இரகஸியத்தை யறிவான். மரணத்தின் இரகஸியத்தை யறிந்தவனே முற்றும் சரியாக நடக்கத் தக்கவன். செய்வினை திருந்தச்செய்தல் அவனுக்கே ஸாத்தியம். ஆதலால் செத்துச் சுடுகாடு சென்றவனே உலகத்தில் துன்பின்றிவாழ யோக்கிய

னவன். அப்படி யென்றால், பிராணன்போகும் வழியெல்லாம் மனதைப் பின் போகவிட்டுத் திரியாமல் பிராணாயாமம் செய்து, வாசி வசத்தால் வலசாரி இடசாரியாகச் சஞ்சரித்து புலன் வழியோடித் திரியும் பிராணனைக்கட்டி அதை அடக்கியாண்டு சுழுமுனையில் பிரவேசித்துப் பிராணலயம் செய்து அதனாலே மனோலயமும் சித்திக்கப் பழகினவரே செய்வினை திருந்தச்செய்ய வல்லவராவர். இதற்கு அதிஷ்டான தேவதை **மாரா.**

14. இடையறாத அப்பியாஸத்தால் முயன்று பழகி மனப்பழக்கம் (கல்வி) முற்றும் படியக்கற்றவர் தாமே கசடறக்கற்று கற்றபடி நிற்கவல்லவராவர். இவர் தாமே ஸகலலோக ரக்ஷண்யராவர். (Saviour of the World) இதற்கு அதிஷ்டான தேவதை **ஹரய:**

15. இதை யெல்லாம் கற்றுக், கற்றபடி நின்றனுபவித்தபின் தவளைபோல் கத்தும் குணம் மாறிப்போம். மௌனஸித்தி யுண்டாம். அப்பொழுது வாக்கு ஸித்தியும் உண்டாம். வாக்கு ஸித்தியுண்டானால் வாயால்பிறப்பதெல்லாம் மந்திரமாம். மனமொருவழிப்பட்டு நிற்கும்போது வார்த்தைகள் அர்த்தபுஷ்டியோடு அருமையாக வெளிவரும். இதற்கு அதிஷ்டான தேவதை **காமேசுவரி.**

இவ்வளவும் மனப்பழக்கம்: மனப்பழக்கம் தினப் பழக்கமாகி தினப்பழக்கம் சகஜமானால் அது **‘ஸ்ரீவித்தை’** யெனப்படும். அது **காதிமத**மென்றும், **ஹாதிமத**மென்று இருவகைப்படும். காதிமதமென்பது **ப்ரஹ்மவித்தை** (ஆத்மவித்தை); ஹாதிமதமென்பது ஸ்ரீவித்தை. (பிரகிருதிவித்தை); முன்னது நிஷ்காமிய தர்மத்தையும் பின்னது காமிய தர்மத்தையும் அனுஸரிப்பதாம்.

———:(*):———

## The Secret of Abstinence.

### “பசியா மருந்து.”

———:++:———

“பசியா மருந்தளிக்கும் பரமரகஸியத்தை” யார் அறிவார்? நாகபட்டினத்தில் வருஷ காலமாய் காஷ்டசமாதியிலிருந்த மௌன சுவாமிகள் இப்பொழுது சமாதி தெளிந்து பேசிக்கொண்டிருக்கிறார். அவருடைய அனுபவத்தை அவர் வாய்ப்பிறப்பாகவே கேட்டறிந்த நண்பர் ஒருவர் தேர்ந்து தெளிந்தபடி எழுதியிருப்பதை மற்றொரு பக்கத்தில் பிரசுரித்திருக்கக் காணலாம்.* வெகு காலம் பசியெடுக்காமலிருப்பது தேஹபாவனை யுள்ளவர்களுக்கு துர்லபமாயினும் தேஹபாவனையை மறந்தவர்களுக்கு அது அரிதில்லை. இன்றைக்கு இருபத்தியைந்து வருஷங்களுக்கு முன்பு அமெரிக்காவில் டாக்டர் டர்னர் 80-நாள் வரையில் ஆஹாரமின்றி இருந்திருக்கிறார். இப்படி யிருக்க இன்னும் பலரைப் பழக்கியும் பார்த்தார். ஹிந்து மததீக்ஷை சிக்ஷைகளில் சந்தராயன விருதமென்பது ஆகாரத்தை யொடுக்கி அன்னமய கோசமாகிய தேஹத்தை வசப்படுத்துவதற்கானவோர் சிறந்த சாதனமாம். பிராணனுக்கு ஆதாரமாயிருப்பது வாயு. ஆகையால் வாயு பக்ஷணம் செய்து பிழைத்திருப்பதும் சாத்தியமே. ஆனால் இது பிராணாயாமஸித்தி கைவந்தவர்களுக்கே ஸாத்தியமாம். கேவலகும்பகம் ஸித்தித்தால், அன்னமய கோசமான தேகம் பிராணமய கோசமான பிரணவ தீர்த்தத்தில் உள்ளும் புறமும் நிறைய அமிழ்ந்திக்கிடக்கும். பசி யென்பது—“Craving of the flesh”—ஊனூட்டி ஊன் வளர்த்தல். ஊனுணர்வொழிந்து வானுணர்வு சித்தத்தால், ஆகாயத்திற் கருடன்போல் அசையாமல் அசைந்தாடிச் சஞ்சரிக்கலாம். இப்பொழுது ஒரு நாளைக்கு 4, 5 தடவை புசிப்பது பெரிய மனுஷர் வழக்கமாயிருக்கிறது. காலையிலெழுந்தால் காபி பணி

* 15-வது பக்கம் 12-வது பாட்டில் 4-வது வரியில் ‘ஞ’வை ‘று’வாகத் திருத்திக் கொள்ளவும்.

யாரம். 10 மணிக்கு சாப்பாடு. இரண்டு மணிக்கு டிபின். 5-மணிக்கு கிளப்பில் தேநீர் அல்லது காபி பணியாரம். 8 அல்லது 9 மணிக்கு சாப்பாடு. இப்படி ஐந்தாவர்த்தி வயிற்றுக்கு ஏதாவது போட்டுக்கொண்டே யிருப்பது சுக ஜீவனமாகப் பலர் நினைக்கிறார்கள். ஆனால் அது வியாதியை யுண்டுபண்ணிப் பிராணனை வாங்குவதாக விருக்கிறது. ஒருபோதுண்பவன் யோகி; இருபோதுண்பவன் போகி: முப்போதுமுண்டால் அவன் ரோகியே. நாற்போதுண்பவன் பிணமே யாவன். ஐம்போதுண்டால் அவன் கதி யென்னுமோ இதை வாசிப்பவரே தெரிந்துகொள்ள வேண்டியது தான். ஆசை யனுபவிக்க அனுபவிக்க வளருவதுபோல், பசிக்கு நினைத்து நினைத்துப்போட்டால், அது வளர்ந்துகொண்டே யிருக்கும். கடைசியில் அது அக்னிமந்தத்தை யுண்டுபண்ணி அசீரணத்தைக் கொடுக்கும். அசீரணமே எல்லா வியாதிகளுக்கும் மூலவேர். அசீரணமில்லாவிட்டால் வியாதியே இல்லை. ஹிந்துக்களின் சித்தாந்த உண்மை யென்ன வெனில்:—

"ஒருபோதுயோகியேயொண்டொளிர்க்கைமாதே
இருபோதுபோகியேயென்ப—திரிபோது
ரோகியேநான்குபோதுண்பானுடல்விட்டுப்
போகியேயென்றுபுகல்."

"உடல் விட்டுப்போகி" யென்றால் பிணமாவானென்பது பொருள். ஆகையால், சுகத்தை விரும்புகிறவர்கள் அளவறிந்து காலமறிந்து தேஹத்தின் குணமறிந்து மிதமாய்ப் புசிக்க வேண்டும். இதற்கு தத்துவஞானத்தைப்போல் கைகண்ட மருந்து வேறில்லை.

——:(o):——

## Character-Building.
## அக்ஷராப்பியாஸ யோகம்.

——:o:——

"அகாராணும் அக்ஷரோஸ்மி" என்றபடி அக்ஷரங்களில் அகாரமாயிருக்கிற பகவானைக்காணவேண்டில் அக்ஷராப்பியாஸம் செய்யல் வேண்டும். அக்ஷராப்பியாஸம் என்றால் என்ன? அக்ஷரத்தை அப்பியாசம் செய்தல். அக்ஷரம் அழியாதவஸ்து. எல்லா எழுத்துக்களின் சப்தத்திலும் அகாரத்வனி அதாவது ஸ்வரம் எப்படி அந்தர்யாமியாக விருக்கிறதோ அப்படிப்போல நாமரூபப் பிரபஞ்சங்களான எல்லாத் தோற்றங்களிலும் க்ஷேத்ரஜ்ஞ ஸ்வரூபியாய் அவற்றின் அந்தராத்மாவா யிருக்கிறார் பகவான்.

"அகரமுதல வெழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றேயுலகு.

அக்ஷரங்கள் (எழுத்து ரூபமாயுள்ளமட்டில்) அழிவதாயினும், அந்த அக்ஷரங்களின் சப்தத்தின் த்வனியின் உள்ளிருக்கும் ஜோதி ரூபமான ஸத்யஸங்கல்பம் அழியாததேயாம். ஏனெனில் அது நாதத்திலிருந்து உற்பத்தியாகி அகாரமாய் விரிந்து உகாரமாய்க்குவிந்து மகாரமாய்ஒடுங்கி அமாத்ரையில் பிரணவசப்தமாகிப் பிரணவநாதத்தில் தானே ஒடுங்குகிறது. ஆகையால் தான் ஓம் என்னும் பிரணவம் வேதமுதல் என்று சொல்லப்படுகிறது. ("In the begining was the Word" என்றார் மற்றொருவரும்.

அக்ஷரங்களுக்கு மாத்ருகா தேவதைகள் என்று பேர். "நாத முதலாகவே பூதபரியந்தமும்" அறிவு பரிணமித்து மாயாலீலை செய்வதையுணர்ந்து,"பின்னர்பூதமுதலாகவேநாதபரியந்தமும்" அந்தர்யோக சாதனத்தால் பக்ஷிர்முகப்பட்டமனதைத்திருப்பி நாதானுசந்தானத்தினால் பிரணவத்தில் அதை லயிக்கச் செய்தல் தானே அக்ஷராப்பியாஸமாகும். வித்தையின் உள்நோக்கமும் இதுவேயாகும். ஆகையால் அக்ஷராப்பியாஸம் என்று 5-வயதில் அரிச்சுவடி துவங்குவதுமுதல் 50 வயதில் அக்ஷரபரப்ரஹ்ம யோகம் விதிக்கிறவரையில் உள்ள மனப்பழக்கத்தைச் சுட்டிக்காட்டி நிற்கும்.

எண்ணின்றி எழுத்தில்லை. வாக்குமூலமாகிய ஸங்கல்ப சக்தியின்றி மனம் உண்டாவதில்லை.

எண்ணம் என்பது மனத்தின் செய்கையன்றி வேறில்லை. ஸங்கல்ப மூலமான ஏகாக்ஷரப்ரஹ்மத்தையின்றி சங்கல்ப ரூபமானவாக்கும் அவ்வாக்கைத் தெரிவிக்கும் எழுத்தும் இல்லையாம். ஆகையால்தான் "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்றார். கண்ணிரண்டும் ஒன்றையே காண்பதுபோல, எண்ணுமெழுத்தும் நாத பிந்து ரூபமாகி ஒன்றையே (ஒரு லக்ஷியத்தையே) காட்டுவதாகும்.

Character என்பது அக்ஷரத்தைப்போல் அழியாத தன்மைவாய்ந்தது. அது மனோவிகாரங்களால் மட்டும் ஆபதன்று; சித்த விருத்தி நிரோதம் செய்த மனத்தால் கிரஹிக்கப்பட்ட லக்ஷியங்கள் சேர்ந்து ஆயது. "குரு தன்னையும் நிலையையும் காட்டினர்" என்று சொன்னதின் சூக்ஷமம் என்னவெனில், அஜ்ஞான இருளைப் போக்குகிற ஆத்மா, அறிவே குருவாய்த்தோன்றி தன்னையும் அதாவது அறிவின் ஸ்வரூபத்தையும், நிலையையும், அந்த அறிவு மனதில் பிரவேசித்து ஸ்வயம்பிரகாசமான தன்னொளியில் விளங்கும் பொழுது அம்மனது சேஷ்டையற்று மௌனமடைந்து நிற்கும் மோனநிலையையும் அனுபவரீதியாக சாக்ஷாத்காரமாகும்படி காட்டினர்-என்பதாம்.

ஆகையால் ஐந்து வயதில் தொடங்கிய வித்தியாப்பியாஸம் (அக்ஷராப்பியாஸம்) 50 வயதுவரையில் தொடர்ந்து நடக்குமென்று சொன்னது. மனதை அக்கக்காய் ஆய்ந்தாய்ந்து அதை நாதத்தில் ஒடுக்கி, நாதமும் கடந்த "ஒழிவில் ஒடுக்கம்" பெற்றபின்தான் மோனநிலை (மனோமௌனம்) சித்திக்கும். இந்த நிலை சித்திக்கப் பெறுதலே அக்ஷராப்பியாஸ வித்தியாம். ஆகையால் "அ"—வென்று வாய்திறந்த குழந்தை "அக்ஷராணம் அகாரோஸ்மி" யென்ற பகவானுடைய அக்ஷராத்மஸ்வரூபத்தை யுணர்ந்து வாய்மூடும் வரையில் அக்ஷராப்பியாஸம் நடந்து கொண்டே யிருக்கும்.

### அக்ஷராப்பியாஸயோகசித்தி.

அஞ்சுவயதிலெனை அக்ஷரமாமமுதூட்டி வளர்த்தஅன்  
அஞ்சஞ்சிலெனைக்கூடி ஆதாவாயுள்ளமர்ந்து [னை  
அஞ்சஞ்சுபத்திலம்மா அருமையாம் வித்திதந்து*  
அஞ்சஞ்சோடைந்நான்கு மானவொருவயதில்தானே  
துஞ்சுமெனைத்துஞ்சாது தாய்நெறியில் சாட்டிவிட்டுக்  
கொஞ்சிவிளையாடிக் குதூஹலமும் நிறையச்செய்து  
நஞ்சேயமுதாய் நயக்குமய்யன் தாள்காட்டி  
நெஞ்சேதனக்கு நிலையான க்ஷேத்திரமாய்  
நஞ்சுண்டான்கண்டத்தில் நயந்திருந்தாளென்தாயார்!  
நஞ்சுண்டஞ்சுண்டு நயமான எட்டுண்டு  
பிஞ்சுடனேபூவுண்டு காயுண்டு பழமுண்டு  
எஞ்சிநின்றவித்துண்டு வித்தில்லா மாமுண்டு  
செஞ்சடையோன் முடிசேர் நீர் மதியுண்டு  
வெஞ்சமரில் வில்லம்பு கொண்டுபொர வெற்றியுண்டு  
நன்னெஞ்சே நீயெனக்குத் துணையாக வந்தமர்ந்த  
[வைபவங்கேள்!

ஓம் தத்ஸத்.

---

* ஹடயோகி ஒருவன் ஓர் மஹானிடம் சென்று தனக்கு ஆகாயத்தில் பறக்க சக்தி இருக்கின்றதென்றும், பூமியின் கீழ் அநேககாலம் கிடக்குந்திறனுண்டென்றும், ஜலஸ்தம்பம் தெரியுமென்றும், இதுபோன்ற மற்றைய சித்து வித்தைகள் தெரியுமென்றும் பெருமை பாராட்டினன். அப்பொழுது மகான் "அப்பா, பக்ஷிகள் ஆகாயத்தில் பறக்கின்றன. புழுக்கள் பூமியின் கீழ் அதிககாலம் மறைந்துகிடக்கின்றன. மீன்கள் ஜலத்தில் வசிக்கின்றன. இம்மாதிரித் தாழ்ந்த ஜந்துக்களைப்போல் நடப்பதினால் என்னபயன். கடவுளைப்போல நடக்க, கருணை முதலிய நற்குணங்களை விருத்திசெய்! கர்வத்தையும் கோபத்தையும் அடக்கிவிடு!" என்று மறுமொழி கூறினர். தாயுமானவரும் "சினமிறக்கக் கற்றாலும்சித்தியெல்லாம் பெற்றாலும் மனமிறக்க கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்று சொல்லி யிருக்கிறார். ஆகையால் மனது தனது வாஸனைகள் யாவையுமிழந்து அதன் உண்மை ரூபத்தை அடைதலே ஸகல வித்திகளையும் விட மேலானது என்பது எளிதில் விளங்கும். இதுவே 'அருமையாம் வித்தி.'

## King Jayasen or the Triumph of Righteousness.

### ஜயசேன ராஜன்.

"தர்மமே ஜயம்"

——:(*):——

(20-வது வாலியம் 307-வது பக்கத்தொடர்ச்சி)

கடற்கொள்ளைக் காரர்கள் ஸாகரிகை யென்னும் பெண்மாணிக்கத்தை விஜயபுரம் என்னும் நகரத்திற்குக் கொண்டுபோய் விற்றுப் போட்டார்கள். இவளை வாங்கின பிரபு அந்த ஊரிலிருந்த குழந்தைகளுக்கு வித்தை முதலியவைகளைக் கற்பித்துக் கொடுக்கும் வேலையில் இவளை நியமனம் செய்தான். படிப்பு, தையல் வேலை முதலியவைகளில் இவள் கைதேர்ந்தவளென்று முன்னமே சொல்லியிருக்கிறோமே. வெகு சீக்கிரத்தில் விஜயபுரம் முழுதும் ஸாகரிகையின் பெயர் பரவிவிட்டது. எங்கே பார்த்தாலும் ஜனங்கள் அவளுடைய அழகு, படிப்பு, அமரிக்கை முதலிய குணங்களைப் பற்றிப்பேச ஆரம்பித்தார்கள். அன்றியும், கானம், தையல் முதலிய தொழில்களை இவள் விசித்திரமாய்ப் படிப்பவர்களுக்குக் கற்றுக்கொடுத்து வந்தபடியால் பெரியமனிதர்வீட்டுப் பிள்ளைகளெல்லாம் எங்கும் இவளைப்பற்றி வியந்து பேசத் தொடங்கினார்கள். விஜயபுரத்தரசனை ஜயப்பிரதாபன் என்பவன் சுபாவத்தில் வெகு நல்லவன். தன் நகரம் முழுவதும் ஜனங்கள் ஸாகரிகையைப்பற்றிப் பேசுவதைக் கேட்டு வியப்புற்று அவளை நேரில் பார்க்க விரும்பி அவளிடம் சென்றான். ஸாகரிகையோ தன்னுடைய பிறப்பை ஒருவருடனும் சொல்லிக் கொள்ளாமல் ஏழைப்பெண்போல் நடந்து கொண்டு வந்தாள். விஜயபுரி அரசன் ஸாகரிகையைக்கண்டு அவளுடன் பேசிச் சந்தோஷமடைந்து அவள் குல கோத்திரங்களை விசாரிக்க, அவள் தான் சாதாரண மனுஷியென்று சொல்லிக்கொண்டாள். ஜயப்பிரதாபன் அவளை முதலில் பார்த்து இவள் சகலமான நற்குண நற்செய்கைகளினுடைய அவதாரந் தானோ என்னவோ என்றெண்ணினான். அவள் பிறப்பு எப்படி யிருந்தாலும்சரி, அவளைத் தான் கலியாணம்செய்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு அவளிடம் விடைபெற்று வீடுபோய்ச் சேர்ந்தான்.

இங்கு இப்படியிருக்கையில், ஜயசேனன் தன் மந்திரி சுசீலனுடன் சில நாளைக்குப் பிறகு தன் பெண்சாதி பானுமதி தனக்கு ஈன்றுகொடுத்த குழந்தையாகிய ஸாகரிகையைப் பார்க்க மிகுந்த ஆவலுடனே காந்தார தேசத்தை விட்டுப் புறப்பட்டுக் கூர்ஜரதேசம் வந்து சேர்ந்தான். கப்பலைவிட்டு இறங்கினதும் தன் கண்மணி சுகமாயிருக்கிறாளா என்னவென்று விசாரிக்கையில், அந்நாட்டு அரசன் குணசீலனும் அவன் பெண்சாதி மிருதுபாஷிணியும் ஸாகரிகை இறந்துபோய் விட்டதைத் தெரிவித்தார்கள். அதைக்கேட்க ஜயசேனனுக்குண்டான துக்கம் கொஞ்ச நஞ்சமல்ல; அவன் தன் பெண்சாதி போன துக்கத்தைப் பெண்ணைப் பார்த்து மறப்போமென்றிருந்தான். பெண்ணும் போய்விட்ட செய்தி காதில் விழுவே முன்வைத்த காலைப் பின் வாங்கித்தன் கப்பலில் வந்து உட்கார்ந்தான். ஒருவனிடமும் பேசவில்லை. திகைத்துப் பித்துப் பிடித்தவன்போலக் கப்பலில் யார் என்னகேட்டாலும் பதில் சொல்லாமல் உட்கார்ந்துவிட்டான். மந்திரி சுசீலன் ஒன்றும் தெரியாதவனாய்க் கப்பலைத் திருப்பிக் காந்தாரதேசத்துக்கு நடத்துக்கொண்டுபோக உத்தரவு செய்தான். கப்பல் போய்க்கொண்டிருந்தது.

கூர்ஜரம் காந்தாரம் இந்த இரண்டு தேசங்களுக்கும் மத்தியில் ஸாகரிகை அப்பொழுது வசித்துவந்த விஜயபுர தேசமிருந்தது. அவ்விடத்தின் அரசன் ஜயப்பிரதாபன் என்றும், அவன் நற்குண நற்செய்கைகள் உள்ளவனென்றும் முன்னமே சொல்லியிருக்கிறோமே. அரசர்கள்

ஸவாரி போகும் கப்பல்கள் அழகாயிருப்பது டன் தூரத்திலிருந்து பார்க்கும்பொழுதே அதில் அரசர்கள் போகிறதாகத் தெரிவிக்கிறதாயுமிருக்கும். அன்றையதினம் ஜயசேனன் கப்பல் கடலில் போவதைக்கண்டு சேவகர்கள் ஜயப்பிரதாபனிடம் சொல்ல, அவன் சவாரிபோகிற அரசன் யாரோ போய்ப்பார்த்து அவருக்குத் தக்கபடி மரியாதை செய்யவேண்டு மென்று நினைத்துத் தனது படகில் எதிர்கொண்டு வந்தான். ஜயசேனனது கப்பலினிடம் வந்து மந்திரியாகிய சுசிலனை விசாரிக்க, அவன் சமாசாரங்களை யெல்லாம் தெரிவித்தான். மந்திரி உள்ளதை யுள்ளபடி சொல்லி "நீர் நம்பினல் நம்பும், இல்லாவிடில் வேண்டாம்; எங்கள் அரசன் ஜயசேனன் பேசி மாதமூன்ருயிற்று" என்ருன். அதைக்கேட்டு ஜயப்பிரதாபன் வியப்புற்று ஆ, ஆ, ஆச்சரியம்! நான் கொஞ்சநேரம் பேசிப் பார்க்கட்டுமா என, அதற்கு மந்திரி உம்மால் ஆனமட்டும் பாருமென்ருன். விஜயபுர தேசத்தரசனும் தன்னுல் கூடியவரையில் முயன்ருன்: ஜயசேனன் ஒரு பேச்சுக்கூடப் பதில் சொல்லவில்லை. ஜயப்பிரதாபன் மிகவும் மனதிரங்கினவனுதலால் எப்படியாவது ஜயசேனனைப் பேசச் செய்ய வேண்டுமென்றெண்ணி மந்திரியாகிய சுசிலனிடம் வந்து, "ஐயா, எங்களுரில் ஸரஸ்வதிபோலப் படிப்பில் தேர்ந்த ஒரு பெண்மணி யிருக்கிருள்; அவள் எப்படிப்பட்டவரையும் சந்தோஷப்படுத்துவாள், அவளைக்கொண்டு இவரைப்பேசச் செய்யலாம்; அப்பொழுதாவது இவர் வாயைத் திறக்கிருரா பார்ப்போமென, அதற்கு மந்திரி ஒப்புக்கொண்டான். உடனே ஜயப்பிரதாபன் ஸாகரிகைக்கு ஆளனுப்பி வரவழைக்க, அவள் கப்பலண்டை வந்து சேர்ந்தாள். அவளைக் கண்டதும் கப்பலிலிருந்த ஜனங்களெல்லாம் இவள் தெய்வப் பிறப்பாக இருப்பாளோ என்னவோ, இவள் தப்பாமல் ஜயசேனனைப் பேசச்செய்வாள் என்று எண்ணினர்கள். ஜயப்பிரதாபனுக்கு அவளைப் பார்க்க வெகு சந்தோஷமாய் இருந்தது. அவன் அவளைப்பார்த்து, "குழந்தாய்! இந்தக் கப்பலில் ஓர் அரசன் மூன்றுமாதமாய் வாய்திறவாமலிருக்கிருராம்; அவரை நீ கூடிய வரையில் முயன்று பேசச்செய்ய வேண்டு" மென்று சொல்ல, அவள் அப்படியே நான் கூடியமட்டும் பிரயாசைப்படுகிறேன் என்று ஒப்புக்கொண்டாள்.

உடனே அவள் எல்லாரையும் கொஞ்சம் எட்டியிருக்கச் சொல்லிவிட்டுத் தான் ஜயசேனன் முன்பாக உட்கார்ந்து கொண்டு, தான் பிறந்ததும் வளர்ந்ததும் ஆதியோடந்தமாகச் சொல்லிவர, அதைக்கேட்டும் கேளாமலிருந்த ஜயசேனன் திடீரென்று கண்விழித்துப் பார்த்து, ஸாகரிகை அவள் தாய்போல் அதே வடிவமாயிருப்பாளாகையால் அவளைப் பார்த்து, "நீயார் அம்மணி, என்னருமைப் பெண்சாதி சாடை உன் முகத்தில் எனக்குத் தோற்றுகிறதே! நீ சற்று முன்னே சொன்னகதை என்கதைபோலிருக்கிறது; இதே புருவம், இதே கண், இதே காது, இதே உருவம் என் பெண்சாதியிட மிருந்தனவே. உன் பெயர் என்ன? இன்னமொரு தடவை உன் கதையைச் சொல் என்ருன். அதைக்கேட்டு ஸாகரிகை, "ஆம், என்கதை உங்கள் கதைபோலத் தானிருக்கிறது என்றேன்" என, அதற்கு ஜயசேனன், நான் பட்டிருக்கும் கஷ்டத்தில் ஆயிரத்திலொன்று நீ பட்டிருப்பாயா? என அதற்கு ஸாகரிகை, "நான் வயதில் சிறியவளாய் உங்கள் பெண்ணென்று சொல்லக்கூடியவளா யிருந்தபோதிலும், நீங்கள் எவ்வளவு கஷ்டப் பட்டிருக்கிறீர்களோ, அவ்வளவு கஷ்டம் நானும் பட்டிருக்கிறேன் என்ருள். உடனே ஜயசேனன் கொஞ்சம் எழுந்து உட்கார்ந்து அந்தப் பெண்ணையும் தனக்கு எதிரில் உட்காரச்சொல்லி, உன்பெயர் என்னவென்று கேட்க, அதற்

குப்பதில் "ஸாகரிகை" யென்று அவள் சொல்லக்கேட்டு, அது தனக்குமட்டும் தெரிந்த பெயராகையாலும், தன் பெண் சமுத்திரத்தில் பிறந்த காரணத்தின் பொருட்டு அவளுக்கு அந்தப்பெயர் கொடுக்கப் பட்டதாகையாலும் ஆச்சரியப்பட்டு, "உன்பெயர் 'ஸாகரிகை தானு? அல்லது நீ யென்னைக் களிப்பிக்க வந்தவளா? அன்றிப்பழிக்க வந்தவளா?" என்று கேட்க, அதற்கு அந்தப் பெண்மணி "நம்மைத் தெய்வமே பழித்திருக்க நாமும் கூடப்பழிக்க வேண்டுமா? தாங்கள் ஆத்திரப்படாமல் கேட்டால் மற்றதையும் சொல்லுகிறேன்; இல்லாவிடில் வாயைமூடிக் கொள்ளவேண்டியதா யிருக்கும்" என்றுகூற, அதற்கு அரசன், "ஆத்திரமில்லை, நீ சொல்லு" என்ருன். உடனே அவள் "என் தகப்பனர் ஒரு தேசத்தரசன்; என் தாயார் என்னை சமுத்திரத்தில் பெற்ருள். கூர்ஜர தேசத்தில் சுமுகி என்னை வளர்த்தாள்; மிருதுபாஷிணி யென்னைக் கொலைசெய்ய யத்தனித்தாள்" என்ருள். அதற்குள் ஜயசேனன், பாவி சண்டாளி கொலை செய்து விட்டாளா என் அருமை மகளை என, ஸாகரிகை அவனே தன் தந்தையெனத் தெரிந்துகொண்டு, "கொல்லவில்லை, பயப்பட வேண்டாம் ஸ்வாமி; தங்கள் அருமை மகள் நான் தான்; இவ்வளவு துக்கத்திற்குப் பெண் பிறந்தேன்" என்று சொல்லித் தகப்பன் காலில் விழுந்தாள். அதனுல் ஜயசேனனுக்குச் சகலமும் தெரிந்து விட்டதுமன்றி நிஜமான தன் மகள் தான் தன் காலில் விழுந்ததென்பதும் தெரிந்து விட்டது. உடனே ஸாகரிகையைத் தன் கன்னத்தோடணைத்து மந்திரியாகிய சுசிலனைக் கூப்பிட்டு "ஓடிவா சுசிலனே ஓடிவா! என் சந்தோஷமே என்னை இப்பொழுது கொல்லும் போலிருக்கிறது; தண்ணீர் நிறைந்த குளத்தில் மடை யெடுக்காவிடில் கரையை உடைத்துக் கொண்டுபோய் விடுவது உனக்குத் தெரியுமே; அதுபோல என் சந்தோஷம் என் மார்பைப் பிளந்துவிடும் போலிருக்கிறது. சீக்கிரம் என் தேசத்தில் ஓரிடத்தை யறுத்து என் உதிரத்தை வெளிவாங்கு. குழந்தை திரும்பி வந்தாள், என் கண் வந்தாள், கண்ணைக் கேள்; எல்லாம் சொல்லுவாள். இனி நமக்கென்ன குறைவு; இவர் யார்?" என்று பலவாறு பைத்தியங் கொண்டவன் போலப் பிதற்றி ஜயப்பிரதாபனைக் காட்டிக் கேட்டான். உடனே மந்திரி இவர்தான் இந்நாட்டரசர்; யஜமானன் படும் துயரத்தைக் கேட்டு பார்த்துப் போக வந்தார் எனவே அதற்கு ஜயசேனன் "சாஷ்டாங்கமாக நமஸ்காரம் ஸ்வாமி! யாரடா அங்கே! கொண்டுவா என் நல்ல வஸ்திரங்களை; என் குழந்தையைக் கண்டபின் கூட நான் அழுக்குத்துணி யுடுத்தவா? கேளு காதுகொடுத்து! ஆகாயத்தில் தேவதைகள் கூத்தாடுகிருர்கள், தம்புரு வீணை முதலிய வாத்தியங்கள் மீட்டுகிருர்கள் எனவே, அதற்கு மந்திரி, "ஐயோ என் கண்ணுக்கு ஒன்றும் புலப்படவில்லையே" என்ருன். இவைகளைக்கேட்ட ஜயப்பிரதாபன் இவருக்குண்டான அதிக சந்தோஷத்தினுல் இவருடைய புத்தி பிரமித்ததென்று தெரிந்து "அவர் கிடக்கிருர், எனக்குக் கேட்கிறது. தேவதைகள் கூத்தாடுகிருர்கள்!" என, உடனே ஜயசேனன் கொஞ்சம் தூக்கம் வருகிறது தூங்கவேண்டுமென்று கேட்டான். ஜயப்பிரதாபன் நல்ல மிருதுவான தலையணையை அவர் தலைக்கிழ் வைத்துத் தூங்குங்கள் என்று கேட்டுக்கொள்ள ஸாகரிகையின் தந்தையும் தன் பெண்ணைக் கண்ட சந்தோஷத்தால் களைத்துத் தூங்கலானுன். ஸாகரிகையும் தனது தகப்பனருடைய உட்கார்ந்தவளாய் அவருடைய நித்திரையை ஈ கூட கெடுக்காமல் காத்திருந்தாள்.

ஜயசேனன் தூங்கிக் கொண் டிருக்கையில் சக்தி யென்னும் தேவதையானவள் தோன்றி அவளது கோவிலுக்கு வந்து தன் குறைகளைச்

சொல்லும்படிக் கட்டளை யிட்டதாகக் கனவு கண்டான். அப்படி தான் செய்யுங்கால் கடைசியில் தான் எதிர்ப்பார்த்திராத சுகத்தை யடையலாகும் என்றும் கனவில் தேவதை தன்னிடம் சொன்னதாகக் கண்டு உடனே எழுந்திருந்து கண்டதை எல்லாரிடமும் சொல்லி அந்த நிமிஷமே அம்பிகையின் கோவிலுக்குப் போக வேண்டுமென்று தெரிவித்தான்.

ஜயப்பிரதாபன் அது கேட்டு அப்படியே யெல்லோரும் அவ்விடம் போவோம், ஆக்ஷேபமில்லை. ஆனல் இரண்டுநாள் என் நகரத்தில் வந்து இளைப்பாறிப் போகும்படி பிரார்த்திக்கிறேன் என, ஜயசேனன் அப்படியே செய்ய ஒப்புக்கொண்டு விஜயபுர நகரத்திற்கு ஸாகரிகை மந்திரி முதலிய தன் பரிவார ஸஹிதம் போய்ச் சேர்ந்தான். அப்பொழுது ஜயப்பிரதாபன் ஜயசேனனுக்கு விருந்து செய்த விமரிசையை ஆதிசேஷன்கூட வர்ணிக்க முடியாது. ஜயசேனன் தன்னைப் போன்ற அரசன் என்பதற்காகவும், பெண்கள் நாயகமான ஸாகரிகையின் தகப்பனர் என்பதற்காகவும், சீக்கிரம் தனக்கு மாமனாராகப் போகிறன் என்பதற்காகவும் இவருக்கு ஜயப்பிரதாபன் மும்மடங்கு மரியாதை செய்ததாகச் சொல்லலாம். ஜயசேனனும் தன் பெண்ணினிடம் விஜயபுரியரசன் வைத்த விசுவாஸத்திற்காக அவனிடம் வெகு பிரீதியாய் இருந்தான். அவர்கள் கலியாணத்தைப் புஷ்பபுரி நகரத்தில் அம்மன் சந்நிதியில் நடத்தி வைப்பதாகச் சொன்னன். உடனே எல்லோரும் அந்நகரத்திற்குப் புறப்பட்டார்கள். காற்றும் இவர்கள் மனோரதத்திற்குத் தகுந்தபடி வாட்டமாய் வீசி ஒருமாதப் பிரயாணத்தை ஒரு வாரத்தில் முடித்தது.

ஜயசேனனுனவன் தன் பெண், ஜயப்பிரதாபன் முதலான எல்லோருடனும் அம்மன் சந்நிதிபோய்ச் சேர்ந்து அம்மனை வணங்கித் தொழுது கை கூப்பிக்கொண்டு நின்றன். அந்தக் கோவில் பூசாரி பானுமதியைக் கடலிலிருந்து எடுத்துப் பிழைப்பூட்டி வைத்த மகா யோகி யென்பவர். ஆனல் அப்பொழுது அவர் மிகவும் கிழவராயிருந்தார். பானுமதியோ தபசிப்பெண்ணுக அந்தக் கோவிலில் அம்மன் பூஜைக்கு வேண்டிய சாமான் முதலியவைகளை எடுத்துக்கொண்டு மகா யோகிக்கு சமீபமாக நின்று கொண்டிருந்தாள்.

ஜயசேனன் தன் பூசையெல்லாம் முடித்து விட்டுக் கைகளைக் கூப்பிக்கொண்டு அம்மனைத் துதிக்க ஆரம்பித்தான். துதித்து முடிந்த பிறகு தன் சரித்திரத்தை முதலிலிருந்து எடுத்துச் சொல்லலானன். "அம்பிகாய், நான் காந்தார தேசத்தரசன்; சிம்மள தேசத்தில் பானுமதி யென்னும் பெண் மாணிக்கத்தை மணம் புரிந்தேன். அவளை ஊருக்கழைத்து வரும்பொழுது கப்பலில் அவள் ஓர் பெண்மணியைப்பெற்று மாண்டாள். அந்தக் குழந்தையைக் கூர்ஜர தேசத்தில் மிருதுபாஷிணியிடம் வளர்த்து வர விட்டுப் போனேன். அவள் 14-வயது வரையில் என் கண்மணியை வளர்த்துக் கடைசியில் என் பொல்லாத காலத்தால் மகளைக் கொல்ல நினைத்தாள். எனது நற்காலமானது எனது குழந்தையை விஜயபுர. தேசத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தது. அங்கிருந்து இங்கு வந்தேன். நீ என்ன உத்தரவு கொடுக்கிறயோ அதைப் பெற்றுக் கொள்கிறேன்" என்று முடித்தான்.

ஜயசேனன் பூசை செய்யும் பொழுதே பானுமதி அவன் முகக் குறிகளால் அவன் இன்னனென்று அறிந்து கொண்டாள். அவன் தன் சரித்திரத்தைச்சொல்லி முடிக்கையில் "கண்டேன் கடைசியில் என் நாதனை, என் பிராணநாதனை" என்றுசொல்லி அவள் மூர்ச்சையடைந்தாள். அதுகேட்டு ஜயசேனன் "இதென்ன ஆச்சரியம்! இந்தஸ்திரீயார்? நாதனைக்கண்டேனென்று மூர்ச்சைபோகிறள், முகத்தில்கொஞ்

சம் தண்ணீர் தெளித்து இவளைப் பிழைப்பூட்டுங்கள் என, அதற்குமகாயோகி, "மகாராஜனே நீங்கள் அம்பிகைமுன் சொன்னவை நிஜமாயின் இவள் தங்களை நாதன் என்று சொன்னதும் நிஜம் தான்" என, அதற்கு ஜயசேனன், "என்னை நாதனென்று கூப்பிட இவ்வுலகத்தில் ஒருவருமில்லையே. இந்தக் கைகளாலே என் பெண்சாதியை சமுத்திரத்தில் தூக்கியெறிந்தவன் நானே என்றான். உடனே மகாயோகி தான் பெட்டியைக் கண்டெடுத்ததும், அதில் கடிதத்தைக் கண்டதும், அதிலிருந்த பெண்ணாகிய பானுமதியைப் பிழைப்பூட்டி அந்தக் கோவிலில் தபசிப்பெண்ணாக வைத்ததும் ஆதியோடந்தமாய்ச் சொல்லி முடித்தான். இதற்குள் பானுமதி மூர்ச்சை தெளிந்தெழுந்து "என் புருஷன் ஜயசேனனல்லவா என்முன் நிற்கிறது" என, அதற்கு அவன், "ஆகா, என் பிராணநாயகி பானுமதியின் குரல் இவளிடமிருக்கிறது" என்று சொல்லித் தன் பெண்சாதி பிழைத்திருப்பதைக்கண்டு ஆனந்தக் கடலில் மூழ்கினன். மறுபடியும் கைகளைக் கூப்பிக்கொண்டு தன் பெண்சாதியைத் திருப்பிக் கொடுத்ததற்காக ஜயசேனன் அம்பிகையைப் பிரார்த்திக்க, கையிலிருந்த மோதிரத்தை பானுமதி பார்த்து "என் பிராணநாதா, நமது கலியாண காலத்தில் தாங்கள் போட்டுக்கொள்ள என் தகப்பனர் கொடுத்த மோதிரமல்லவா இது!" என, அவன், "ஆம், அது இருக்கட்டும், முதலில் நான் இந்தக் கைகளால் உன்னைச் சமுத்திரத்தில் புதைத்தேனே; அந்தக் குற்றத்தை மறந்து மறுபடியும் இவைகளைத் தழுவிக் கொள்வாயாக" என்றான்.

இதற்குள் ஸாகரிகைக்குச் சந்தோஷம் பொறுக்கக்கூடவில்லை; தன் தாயாரைக் கட்டிக்கொள்ள வேண்டுமென்று ஓடினாள். ஜயசேனனும் தன் மனைவிக்குத் தன்பெண்ணைக் காண்பித்து "இவள்தான் உன்வயிற்றுக்குப் பாரமாயிருந்து கடலில் பிறந்தபெண். கடலில் பிறந்ததால் ஸாகரிகையென்று என்னால் காரணப் பெயர் அளிக்கப்பட்டது" என்று கூற, பானுமதியும் தன்மகளை மார்போடு அணைத்துக்கொண்டு கொண்டாடி ஆனந்தக்கண்ணீர் பெருக்கினாள். ஜயசேனன் தனக்குண்டான பாக்கியத்தைக்கண்டு மனமகிழ்ந்து, "அம்பிகாய் என் தாயே, இந்தக் கலிகாலத்தில் சத்தியமுள்ள தெய்வம் நீயே! கனவில் வந்துதித்து இறந்துபோன என் பெண்சாதியைத் திரும்பக் கொடுத்தாயே. வருஷாவருஷம் உன் கோவிலுக்குப் பூஜை நடப்பிக்கிறேன்" என்று சொல்லி அனேகவிதமாய் அபிஷேகங்கள் அம்மனுக்கு நடப்புவித்து, அன்றையதினம் ஜயப்பிரதாபனுக்கு ஸாகரிகையைக் கலியாணஞ்செய்து கொடுத்தான்.

ஜயசேனன் எப்பொழுதும் நன்மையைக் கைக்கொண்டவனா யிருந்தபடியால், கடைசியாய் அவன் நன்மை அவனைக்காத்து அவன் பெண்சாதி பிள்ளைகளை அவனுக்குத் திருப்பிக் கொடுத்தது. சுசீலன் என்னும் அவன் மந்திரி உண்மை, நம்பிக்கை, விசுவாஸம் இவைகளுக்கு இருப்பிடமாயிருந்தான். இவன்மாத்திரம் நல்லவனாயிராமல் கெட்டவனாய் இருந்திருந்தால் ஜயசேனன் கூர்ஜரம் முதலான தேசங்களில் சஞ்சாரம் பண்ணிக்கொண் டிருந்தபொழுது இவன் தேசத்தைக் கட்டிக்கொண்டிருக்கலாமல்லவா? மகா யோகியைப்போன்ற நல்ல பிராணி எந்த உலகத்திலும் கிடைக்கார்கள். நன்மையைச் சனங்களுக்கு இன்னவிதமாய்ச் செய்யவேண்டுமென்றறிந்தவர் அவரே. இவர்களில் கொடியவர்கள் மிருதுபாஷிணி குணசீலன் இவர்களிருவர்களே. அவர்களுக்கான கதியை விசாரிப்போம். அவர்கள் ஸாகரிகையைக்கொல்ல யத்தனித்த சங்கதியும் அவள் தெய்வச்செயலால் பிழைத்துப்போனதும் அத்தேசத்து சனங்களுக்குத் தெரிந்துவிட்டது. க்ஷாமகாலத்தில் நம்மைக் காப்பாற்றினவன் பெண்ணைப் பாதகி கொல்ல நினைத்தாளென்று அவள்மேல் கோபங்கொண்டு ஒருநாள் நடுராத்திரி அவள் வீட்டில் நெருப்புவைத்து, அவளையும் அவள் புருஷன் குழந்தை முதலான யாவரையும் கொன்றார்கள். தீங்கு நினைத்தால் தீங்கே விளையுமல்லவா?

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்."

"அம்பிகேயுன்னையானிமைப்பொழுதும்மறவாமல்
தம்பிமுதன்சாக்ஷியாகத்தாயவிதயத்தில்வைத்து
நம்பியுன்னைநாணமல்நமச்சிவாயவெனத்தொழுது
கும்பமுனிக்கயக்ரீவர்குணமுடன்போதித்துவந்தத்
துவம்பதமாம்பொருள்நிறைந்தாகவியநாமாவளியை
நம்பியுன்பாதமேசரணென்றுசாக்ஷிநீயாகக்
கும்பிட்டேன்தாயேதைவிகமாய்வலுவில்வந்த [மே!"
வம்புதுன்பெல்லாமுன்னருளாலின்பமாய்முடிகவம்

ஓம் தத்ஸத்.

——:(*):——

## COCOA-BUTTER.

## தேங்காய் வெண்ணெய்.

——:(*):——

தேங்காயின் விலை வர வர ஏறி வருகிறது. முன் காலணாவுக்கு விற்ற தேங்காய் இப்பொழுது ஒரு அணாவுக்கு விலைப்போகிறது. இன்னமும் விலையேறுமென்று சொல்லுகிறார்கள். இதற்குக் காரண மென்னவெனில், தேங்காய்க் கொப்பரையிலிருந்து எடுக்கப்படும் தேங்காயெண்ணெயைச் சுத்திசெய்து ஒருவிதமான வெண்ணெய் செய்கிறார்கள். அது சாதாரண வெண்ணெய் போலவேயிருப்பதால் ஜனங்கள் மேற்குத் தேசங்களில் அதை ஏராளமாக உபயோகிக்கிறார்கள். இந்தியாவிலிருந்து தேங்காய் கொப்பரைகள் இதற்காகவென்று ஏராளமாக ஏற்றுமதியாகின்றன. தேங்காய் வெண்ணெய்க்காக மேற்றிசை வியாபாரிகள் அதை அதிக விலைகொடுத்து வாங்கிக் கப்பலேற்றிக் கொண்டு போகிறார்கள். தேங்காய்க் கொப்பரையை சிறு துண்டுகளாக நறுக்கி எண்ணெயெடுக்கும் யந்திரத்தில் போட்டு ஆட்டி தேங்காய் எண்ணெயைப் பிழிந்தெடுத்து விடுகிறார்கள். அந்த எண்ணெயில் வெண்ணெயிலுள்ள சுத்தமான கொழுப்போடு சோப்பு செய்வதற்குபயோகமாகும் அசுத்தக் கொழுப்பும் சேர்ந்திருக்கிறது. இதற்கு சோப்புக் கொழுப்பு (Soap fat) என்கிறார்கள். இதனால்தான் தேங்காயெண்ணெய்காறல் வேகமடிக்கிறது. இதையெடுத்துவிட்டு சுத்தி பண்ணினால் வெகு காலத்துக்கு அது கெடாமலிருக்கிறது. தேங்காய் எண்ணெயை ஒரு பெரிய தொட்டியில் விட்டு அதில் சாக்குப்பொடியை (சீமைச் சுண்ணாம்புப்பொடி) கலந்தால், அந்தப்பொடி சோப்புக் கொழுப்போடு சேர்ந்துகொண்டு அடியில்போய் தங்கிவிடுகிறது.

பிறகு தெளிந்த எண்ணெயை மற்றொரு தொட்டியில் யந்திரத்தின் விசையால் மேலிழுத்துப் பாயச்செய்கிறார்கள். இப்படி அந்த எண்ணெயைக் குழாய்வழியாக 'பம்பு' செய்யும்பொழுது அதிலுள்ள மஷ்டுகள் போகும்படி அதை நாலைந்து வடிக்கட்டும் யந்திரங்கள் மூலமாகப் பாயச்செய்து இப்படி வடிக்கட்டியிறக்கிய நெய்யை ஒருதொட்டியில்விட்டு அமுக்கி 270 டிகிரிக்குமேல் நீராவிக் குழாய்கள் மூலமாகச் சூடேற்றுகிறார்கள். தேங்காய் நெய்யானது ஸ்படிகம்போல் சுத்தியாகிறவரையில் இப்படிச் செய்கிறார்கள். பிறகு அதை தானாக நிறுக்கும் ஒரு யந்திரத்தில் பாய்ச்சி சம அளவுள்ள சதுர கனத்துண்டுகளாகச் செய்து பில்லைகளாக விற்கிறார்கள். குழாய்களில்விட்டு உருண்டை வடிவாகவும் செய்து விற்கிறார்கள். இந்தத் தேங்காய் நெய் வெகுகாலத்துக்குக்கெட்டுப்போகா திருப்பதோடு வெண்ணெய் நிறமாகவு மிருக்கிறது. சுத்திசெய்த தேங்காய் நெய்ஸ்படிகநிறமாயிருப்பதைவெண்ணெய்போலிருக்க நிறமேற்றுகிறார்கள். இது ஏராளமாக விலைப்போகிறது. இந்த தேங்காய் வெண்ணெய் செய்கிறவர்கள் வேண்டிய அளவுக்கு செய்ய முடியாதபடியால் சரக்குச்கு கிராக்கியுண்டாகிறதென்று சென்ற சில வருஷங்களில் இதன் விலை ஒன்றுக்கு ஒன்றரையாக ஏறிவிட்டது. இந்தத் தேங்காய் வெண்ணெய்க்கும் சாதாரண வெண்ணெய்க்கும் வித்தியாஸம் கண்டு பிடிப்பது சாதாரண ஜனங்களுக்குக் கூடாமையாகவிருக்கிறதாம். மாதக்கணக்காக இதை வைத்திருக்கலாம்: கெட்டுப்போகிறதில்லை.

சாக்குத்தூளினால் பிரிக்கப்பட்ட சோப்புக் கொழுப்பை 'ஸல்பரிக் அஸிட்' (கந்தகத்திராவகம்) விட்டுக்கலந்தால், அது சாக்குத்தூள் கரைந்துபோகும்படிச் செய்கிறது. சோப்புக் கொழுப்பு விடுபட்டு மேலே மிதக்கும். அதையெடுத்து சோப்புச் செய்கிறவர்களுக்கு விற்கிறார்கள். கொப்பரையின் மேல்தோல் முதலிய

வற்றை மாட்டுக்கும் பன்றிக்கும் நல்ல தீனியாக விற்கிறார்கள். ஆறேழுவருஷங்கள் முன் ஆஸ்திரியாவில் இந்தத் தேங்காய் வெண்ணெய் ஒருநாளைக்கு 40 டன் செய்துவந்தார்கள். இப்பொழுது தினம் 300 டன்னுக்குக் குறையாமல் செய்து விற்கிறார்கள். இன்னமும் சரக்குக்கு கிராக்கியிருக்கிறதாம். இப்படியாக நமது தேசத்தில் விளையும் முக்கிய வஸ்துவான தேங்காய்க்கு அந்நிய தேசத்தார் போட்டியால் மிகுந்த கிராக்கி யேற்பட்டு ஏழைகளுக்குத் தேங்காய் கிடைப்பது கஷ்டமாகவிருக்கிறது. தேங்காயோட்டினால் அழகிய புத்தான்கள் செய்து விற்கிறார்கள். மனப்பழக்கமாகிய கல்வியோடு கைப்பழக்கமாகிய தொழில் சாமர்த்தியமும் ஏற்படவேண்டும். அதிலும் யந்திரங்களின் உதவியால் ஏராளமாகச் செய்வதற்கான சாதனங்கள் ஏற்படவேண்டும். மேற்றிசையாருக்கு யந்திரங்களின் உதவி ஜாஸ்தியாக விருக்கிறது. நமக்கு பூசாரத்தின் உதவியால் விளைபொருள் சாஸ்தியாக விருக்கிறது. அதை உபயோகிக்கும் வகையறியாமல் இருப்பதால் நம் தேசத்தில் விளைந்தபொருளை நாமே யனுபவிப்பது கஷ்டமாகவும் கிராக்கியாகவும் போகிறது. இதற்கெல்லாம் பரிகாரம் பலபேர் பலவிதமாகச் சொல்லுவார்கள். யார் என்னசொன்னாலும் மனப்பழக்கம் (கல்வி)யின்றி எதுவும் ஆகாது. மனப்பழக்கம் உள்ளவர்கள் இத்தேசத்தில் பரசுகத்திலேயே நாட்டம் வைத்தவர்களாகவிருக்கிறார்கள். அவர்கள் இகபரமிரண்டையும் ஏகமாயறிந்து பரோபகாரார்த்தம் பரத்தில் கண்ட உண்மைகளை இகத்திலுபயோகித்து ஜனங்களுக்கு நல்வழி காட்டல்வேண்டும். அதற்கு தனவான்கள் உதவிவேண்டும். தனவான்கள் மௌட்டியம் தலைக்கேறி இந்திரியசுகத்தில் மூழ்கிக்கிடப்பதால் அவர்களுடைய சகாயம் கிடைப்பது அரிதாயிருக்கிறது. திருவள்ளுவர்க்கு ஏலேலோ சிங்கன் கிடைத்தாற்போலும், ஏலேலோ சிங்கம் செட்டிக்குத் திருவள்ளுவர் கிடைத்தாற்போலும் சாதகசாதனங்கள் பொருந்த அமையவேண்டும்.

ஓம்தத்ஸத்.

---